# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
26.8.2007 ரூ.8.00
80 பக்கங்கள்




சோனியாவின்
ரகசிய திட்டம்!

# டைட்டானியம்னா என்ன சாமி?

# Team Health Shoppe
For Wellness



**சென்னையில், டீம் ஹெல்த் ஷாப்பின் 4வது கிளை - புரசைவாக்கத்தில்**

பாரம்பரியமான அழகு சாதன மற்றும் உணவு பொருட்களை இயற்கையான முறையில் வழங்குகிறோம். வாருங்கள், வாழ்க்கைக்கு மேலும் மெருகேற்றுங்கள்.





**ஸ்பெஷல் ஆஃபர்***
அனைத்து ஆலோவீரா தயாரிப்புகளுக்கும் 5 முதல் 10% தள்ளுபடி. இச்சலுகை குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே






*Conditions apply



- Team Energy Herbal water
- Aloe vera based beauty products
- Natural Health Products





## TEAM EUBIO CARE (Division of CAL)

**வண்டலூர்:** டீம் ஹவுஸ், ஜி.எஸ்.டி. ரோடு, சென்னை - 48. போன்: 2275 0502

**அண்ணாநகர்:** பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, (லேபர் ஆபிஸர்ஸ் குவார்ட்டர்ஸ் அருகில்) 24A, பஸ் ரூட், போன்: 4269 3332

**இந்திரா நகர்:** 3வது அவென்யு, எண்.26, தரைதளம், கார்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், போன்: 4269 5115

**புரசைவாக்கம்:** 238, கீழ்தளம், பிரின்ஸ் டவர், (அபிராமி மால் எதிரில்), புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-600 010. போன்: 4542 8898

For bulk requirements, Contact : Team House - GST Road, Vandalur, Ch - 48
Fax : 22750860 (or) E-mail: teamhealthshoppe@drraoholdings.com

www.teamhealthshoppe.com | OPEN ON ALL DAYS

Godrej

# Kalí Mehendí

கருமையான கூந்தல்,
இயற்கையின் பராமரிப்பு




புதிய கோத்ரெஜ் காலி மெஹந்தி இப்போது ஒரு கவர்ச்சிகரமான 10 கிராம் சேஷேயில் வருகிறது. மருதாணி, நெல்லிக்காய், சீக்காய் மற்றும் ரீடாவிலிருந்து, எந்தவித கவலையுமின்றி, கருமையான அழகான கூந்தலைப் பெறுங்கள்.









*10 g sachet available at Rs10/- only

mudra 8538 tam

ஆசிரியர் பக்கம்

● பி.சாய்நாத்துக்கு விருது கிடைத்திருப்பது இந்தியர்கள் பெருமைப்பட வேண்டிய விஷயம் - வி.சௌந்தர்ராஜன், சென்னை - 42 ● தகுந்த துறையைத் தேர்ந்தெடுத்து பிரதிபலன் பாராமல் உழைத்தால் துருவ நட்சத்திரமாகலாம் என்பதற்கு சாய்நாத் உதாரணம். - ரொசாரியோ ரவிச்சந்திரன், சென்னை - 59, நாகராஜன், பொள்ளாச்சி, பொருநை பாலு, நெல்லை

# கண்ணீர் தந்த கட்டுரை!

முதல்வர் ப.சிதம்பரம்...

● கோஷ்டிப் பூசல் இருக்கும் வரை கி.பி.3011 வந்தாலும் காங்கிரஸ் ஆட்சிக் கட்டில் ஏற முடியாது - ச.இராசன், திருச்சி, த.அசாருதீன், பள்ளப்பட்டி. ● நளின அரசியல்வாதி சிதம்பரம், முதல்வராக வாய்ப்பில்லை - எம்.சிவகுருநாதன், தஞ்சை

தலையங்கம்

● உத்தமத் தலைவர்கள் இன்று எங்கு இருக்கிறார்கள்? இதன் பெயர்தான் ஜனநாயகமா! - என்.காளிதாஸ், சிதம்பரம் ● மக்கள் நலன் பொருட்டு தமிழகத்தைத் தொழில்மயமாக்குவதற்குத்தான் பாடுபடுகிறார் கருணாநிதி. தலையங்கக் கருத்து ஏற்புடையதல்ல - இரா.கல்யாண சுந்தரம், மதுரை.

வைரவிழா சிந்தனைகள்...

● சுதந்திரம் வாங்கிக் கொடுத்த முன்னோரை நினைவுபடுத்தி அஞ்சலி செலுத்தியது இதம் - என்.உஷாதேவி, மதுரை, கோமளா ரங்கநாதன், சென்னை - 17, வீ.உதயகுமரன், வீரன்வயல், ● தமிழகப் போராளிகளைப் பற்றியும் கூறியிருக்கலாமே! - எஸ்.சங்கர், மதுரை.

கனிமொழி பேட்டி

● பெற்ற தாய், தந்தையை மறக்காத கனிமொழி பாராட்டுக்குரியவர் -எஸ்.ஆர். மணியன், துறையூர் ● ஜெ, விஜயகாந்தை விமர்சித்து முழுமையான அரசியல்வாதியாகிவிட்டார் - மல்லிகா அன்பழகன், சென்னை - 78. ● மழைக்

## ஸ்பீட் போஸ்ட் ஸ்பீட் போஸ்ட்

● சேவாலயா முரளிதரன்போல் ஒவ்வொருவரும் முன் வந்தால் இந்தியா வல்லரசாகிவிடும் - எஸ்.கோபாலன், தங்கநல்லூர், ● ஐஸ்

வாசகர்களே...
உங்கள் கருத்துகளை கல்கி இணைய தளத்திலும் (www.kalkiweekly.com) பதிவு செய்யலாம்.
வாரம்தோறும் விரைந்து வந்து சேரும் முதல் மூன்று நச் விமர்சனங்களுக்குப் பரிசுகள் உண்டு!

கால மாலைத் நேந்ராக இதம் தந்த பேட்டி - த.சத்தியநாராயணன், அயன்புரம்

**சிறுகதைகள்**

● குடிக்கு முன் - குடிக்குப் பின் என்று ஒரு தந்தையின் இருவேறு பக்கங்களைக் காட்டிய சிறுகதை அப்பாவுடன் ஒரு நாள் - **ஜே.துரைராஜு, சென்னை - 116**
● நெஞ்சை கனக்கவைத்து விட்ட படைப்பு - **பி.எல்.பரமசிவம், புளூார்.**

**தராசு பதில்கள்**

● பல பதில்கள் பொன்னெழுத் துக்களில் பொறிக்கப்பட வேண்டியவை - **கே.கஸ்தூரி, வேலூர்** ● கிரண்பேடி பற்றிய பதில் நாட்டு மக்களின் பொதுவான எண் ணங்களின் பிரதிபலிப்பு **லெ.நா.சிவகுமார், சென்னை - 33, வசந்தா காந்தி, கருப் பம்புலம்.**

மற்றவை...

● வலிப்பு நோய் பற்றிப் படித்ததும் கண்ணீரே வந்துவிட்டது! - **அஜிதா, கம்பம்**
● உலப்பு, புரைப்பு என்ற அறியாச் சொற்களுக்கு ட்யூஷன் எடுத்துவிட்டார் சுஜாதா - **ச.ஆதிகேசவன், கோவில்பட்டி**
● அம்சப்ரியாவின் கவிதை படித்ததும் சிறை பட்டது ப்ரியம் மட்டுமல்ல... என் இதயமும் தான்! - **எஸ்.சங்கர், திருப்பரங்குன்றம்,**
அடையாளத்தை இழக்க வேண்டா மென்று நீர் கூறினாலும் வாக்காளர் அடை யாள அட்டை குளறுபடிகள் தொடர்ந்து கொண்டேதான் இருக்கும்.- **கே.கிருஷ்ணன், காரைக்குடி** ● துணை நடிகைகளின் வேதனை துன்ன வைத்தது. - **பி.சிவா, பாளையங் கோட்டை.**

## போஸ்ட் ஸ்வீட் போஸ்ட் ஸ்வீட் போஸ்ட்

க்ரீம் சாப்பிட்டாலே டான்ஸில் வந்துவிடும் என்று நினைத்திருந்தோம். அனைத்துச் சந்தே கங்களும் அறவே நீங்கின - **கௌரிசங்கர், நல்லாலூர்.**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**
தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**
ஆசிரியர் குழு :
**சா.ஜெயராஜ், ஆரணி யுவராஜ்**
வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**
தொலைபேசி :
**2225 1522, 2225 0623, 2225 1324**
தொலைநகல் :
**044 - 22251021**
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 440/-**
**ஆறு மாதம் : ரூ. 220/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

டாடா நிறுவனம் டைட்டானியம் டையாக்ஸைடு தொழிற்சாலையை தூத்துக்குடி, திருநெல்வேலி மாவட்டங்களில் அமைப்பதையொட்டி, பல அரசியல் கட்சிகள் சார்பில் பொது மக்கள் கருத்தறியும் கூட்டங்கள் நடந்துள்ள நிலையில், மக்களின் உண்மையான மனநிலை என்னவென்பதைத் தெரிந்துகொள்ள நாமும் களத்தில் குதித்தோம்.

சாத்தான்குளம், திசையன்விளை, தட்டார்மடம் - இந்த மூன்று கிராமங்களில்தான் டாடா தொழிற்சாலைக்கென நிலங்கள் ஒதுக்கீடு செய்யப்படுவதாக இருந்தன. திசையன்விளை மாத்திரமே மூன்றில் சற்று போஷாக்கான ஊராக உள்ளது. மற்ற இரண்டிலும்

* சக்தி * சந்திரா * சக்திகனி * பிரேம்குமார்

# டைட்டானியம்னா என்ன சாமி?

டைட்டானியம் டையாக்ஸைடு என்றால் என்ன, இதை எப்படித் தயாரிக்கிறார்கள், இதற்கு 10,000 ஏக்கர் நிலப்பரப்பு தேவையா என்பன போன்ற கேள்விகளோடு, உலகின் பல நாடுகளில் டைட்டானியம் டையாக்ஸைடு தொழிற்சாலை அமைத்துத் தந்தவரும் இந்தத் துறையில் நிபுணருமான என்.எஸ். வெங்கட்ராமனைச் சந்தித்தோம்...

"டைட்டானியம் டையாக்ஸைடு என்பது ஒரு வேதிப்பொருள். இது பெயிண்ட், பேப்பர், பிளாஸ்டிக் போன்றவை தயாரிக்கத் தேவைப்படுகிறது. டைட்டானியம் டையாக்ஸைடையே உண்டாக்கத் தேவைப்படுவது இல்மனைட் என்னும் தாது. இது தமிழ்நாடு, கேரளா மற்றும் ஒரிஸ்ஸா மாநிலங்களின் மண்ணில் நிறைய கலந்திருக்கிறது. தமிழ்நாட்டில் குறிப்பாக தூத்துக்குடி, திருநெல்வேலி மற்றும் குமரி மாவட்டங்களில் கிடைக்கிறது.


* என்.எஸ்.வெங்கட்ராமன்

டைட்டானியம் டையாக்ஸைடு தொழிற்சாலையின் மூலம் சுற்றுச் சூழலுக்கு மாசு ஏற்படாது. ஏற்கெனவே அரசு சார்பில் தாதுக்களைப் பிரித்தெடுக்கும் தொழிற்சாலை மணவாளக்குறிச்சியில்

படிக்காத பாமரர்கள்தான் அதிகம். பலருக்கு டைட்டானியம் டையாக்ஸைடு என்ற பெயரே வாயில் நுழையவில்லை. 'அப்படின்னா என்ன?' என்று நம்மையே அவர்கள் திருப்பிக் கேட்டபோது பகீரென்றிருந்தது. ஒரு சிலர் விவரமாகப் பேசினாலும் முகம் காட்ட மறுத்து ஒதுங்கிக்கொண்டது தனிக் கதை. அதற்கு அவர்கள் சொன்ன காரணம், அரசியல்வாதிகளை எதிர்த்து ஊரில் வாழ முடியாது என்பதுதான். அவர்களின் உள்ளக் குமுறலிலிருந்து...

**செல்வகுமார்** மற்றும் **அழகு சுந்தரி** *(தனியார் ஊழியர்கள்)* : எங்களுக்கெல்லாம் நல்லது செய்யணும்னு சொல்லிக்கிட்டு அரசாங்கம் தப்புத் தப்பா ஏதேதோ செய்யுதுங்க. நான் ரொம்பப் படிக்காதவன். டைட்டானியம்னா என்னன்னு எனக்குச் சரியா சொல்லத் தெரியல. ஆனா விவசாய நிலங்கள அழிச்சு தொழிற்சாலை தொடங்குனா ஊருக்கு விமோசனம் கிடைக்காதுன்னு மட்டும் தெரியுது. யாரையும் குத்தம் சொல்ல விரும்பல, மக்களை நினைச்சுப் பாருங்கன்னுதான் சொல்றோம். ஆனா மனுஷனாகூட மதிக்க மாட்டோம்னா நாங்க என்னத்த சொல்றது?



✱ மகாராஜன்



✱ கனகம்



✱ செல்வகுமார்



✱ அழகுசுந்தரி

**சக்திகனி** *(பனை ஏறும் தொழிலாளி)* : வேணவே வேணாம். டாடாவோ சோட்டாவோ... எந்தப் பயபுள்ளையும் எங்க ஊர்ல கால் வைக்க வேணாம். எங்க நெல நீச்சைப் பார்த்துக்கிட்டு நாங்க நிம்மதியா இருக்கோம். எதுக்கு வீணா குட்டையக் குழப்புறாங்கன்னு தெரியல. இப்ப முருங்கைலேர்ந்து பலதும் நல்லா காய்க்குது. விவசாயமும் நல்லா நடக்குது.

> மக்களை நினைச்சு பார்க்கச் சொல்றோம். ஆனா, மனுஷனா கூட மதிக்க மாட்டேங்கறாங்க!

எதுக்கு ஃபேக்டரி அது இதெல்லாம்? நாளைக்கு மண்ணுல புழுபூச்சிகூட மொளைக்காது. விஷ பூமிய வெச்சிக்கிட்டு நாங்க என்ன பண்றது? அந்தப் பேருகூட வாய்ல நுழைய மாட்டேங்குது. என்ன சாமி அது... டைட்டா... கொய்ட்டா? எதுவும் வேணாம் எங்களுக்கு!

**மஹாராஜன்** (முடி திருத்

இயங்கி வருகிறது. தவிர, இந்தியாவில் டைட்டானியம் டையாக்ஸைடு தொழிற்சாலைகள் நான்கு இருக்கின்றன. அதில் இரண்டு கேரளாவிலும் ஒன்று தூத்துக்குடியிலும், மற்றொன்று மேற்கு வங்கத்திலும் உள்ளது.

2500 கோடி செலவில் வருடத்துக்கு ஒரு லட்சம் டன் டைட்டானியம் டையாக்ஸைடு தயாரிப்பது டாடா திட்டம். ஒரு டன் தயாரிக்க இரண்டே கால் டன் இல்மனைட் தேவை. இந்தக் கணக்குப்படி பார்த்தால் அவர்களுக்குத் தேவையான இரண்டே கால் அல்லது இரண்டரை லட்சம் டன் இல்மனைட்டை எடுக்கப் பத்தாயிரம் ஏக்கர் சற்று அதிகப்படியாகத்தான் தெரிகிறது. அவர்கள் கேட்கும் பத்தாயிரம் ஏக்கரில் ஐந்து லட்சம் டன் இல்மனைட் எடுக்க முடியும். தங்கள் தேவைக்குப் போக, ஏற்றுமதி நோக்கமும் டாடாக்களுக்கு இருக்கக்கூடும்.

ஒரிஸ்ஸா போன்ற இடங்களில் பூமிக்குக் கீழே எழுபத்தைந்து அடி வரை மண்ணில் இல்மனைட் இருக்கிறது; ஆனால் ராதாபுரம், சாத்தான்குளம் பகுதிகளில் 20 அடி வரையிலும், சில இடங்களில் இரண்டடி வரையிலும்தான் இல்மனைட் கிடைப்பதாகச் சொல்லியிருக்கிறது டாடா. கிடைக்கும் இல்மனைட்டில் பத்து சதவிகிதம்தான் டைட்டானியம் இருப்பதாகவும், எனவேதான் பத்தாயிரம் ஏக்கர் பரந்த நிலம், சுரங்கத்துக்காகத் தேவைப்படுகிறது என்

துனர்) : இந்த விவகாரமே வேறங்க. இடையில மாட்டிக்கிட்டு பொது மக்கள்தான் அல்லாடுறாங்க. வி.வி. மினரல்ஸ் ஓனர் வைகுண்டராஜன் ஃபேக்டரிக்கும் அரசுக்கும் இருக்குற பிரச்னைதான் இப்படி திசைமாறிப் போச்சுன்னு ஊர்ல பேசிக்கிறாங்க. விவரமா கேட்டா விலகிப் போறாங்க. விரட்டிக் கேட்டா அடிக்க வர்றாங்க. எதையும் பேசவே பயமா இருக்கு.



* சுமதி

**சத்யபாமா** *(மாணவி)* : எங்க ஊர்களையெல்லாம் சுத்திப் பார்த்தீங்கள்ல... எப்படி இருக்குது? வறட்சி தாண்டவமாடுதில்லையா? இன்னும் எவ்வளவு நாளைக்குத்தான் இப்படியே இருக்கறது? எங்க ஊர்லயும் ஃபேக்டரி அது இதுன்னு வந்து நாங்களும் நாலு காசு சம்பாதிக்க வேணாமா? குடும்பம் குட்டியோட சந்தோஷமா இருக்க வேணாமா? வீட்டுக்கு ஒருத்தருக்கு வேலை தரேன்னு சொல்றாங்க; எடுத்த மணலை திரும்பக் கொட்றேன்னு சொல்றாங்க. வேற என்னங்க வேணும்? தொழில் வளமைதான் வறுமையைப் போக்கும். இதை நாம புரிஞ்சுக்கணும்.

**செல்வன்** *(பிரஸ்ஸில் பணிபுரிபவர்)* : இன்னைக்கு இளைஞர்களுக்கு இங்க பெருசா வேலை இல்லைங்க. நகைத் தொழிலை விட்டா வேற தெரியாது. இப்படியே எல்லாத்தையும் வேணாம் வேணாம்னு முட்டுக்கட்டை போட்டுக்கிட்டே இருந்தா அப்புறம் எப்படித்தான் முன்னேறுறது? வேணாம்னு சொல்றவங்க சும்மா சொல்லலையாம். பின்னாடி பணம் வேலை செய்யுதுன்னு



பேசிக்கறாங்க. எது உண்மையோ யார் கண்டது? ஆனா ஒண்ணு மட்டும் நிச்சயம்ங்க, டாட்டாவுக்கு டாட்டா காண்பிச்சா ஆட்டம் காணப்போறது நம்ம மக்கள்தான்!

**கனகம்** : இதைப் பத்தி எனக்கு எதுவும் தெரியலங்க. டைட்டானியம்னா அணுவா? அதுவே எனக்குச் சரியா தெரியல. ஆனா தொழிற்சாலை வந்தா நல்லதுன்னுதான் நினைக்கறேன். அரசியல் கட்சிக்காரங்க அரசியல் பண்ணாம இருந்தாலே போதும்னு தான் தோணுது.

**பிரேம்குமார்** *(கவுன்சிலர்)* : யாரை வேணும்னாலும் ஏமாத்தலாம். ஆனா எங்களை மாதிரி ஏழை பாழைகள ஏமாத்த முடியாது. வீட்டுக்கு ஒருத்தருக்கு வேலைன்றாங்க. இந்தத் திட்டத்துக்கு நிலம் கொடுத்து பாதிக்கப்படப் போற 18,200 பட்டதாரிகள் இருக்கோம். எல்லாருக்கும் வேலை தந்துட முடியுமா? நேரிடையா 1000 பேருக்கும் மறைமுகமா 2500 பேருக்கும் தரலாம். மீதிப் பேரோட கதி? ஏற்கெனவே இப்படித்தான் கூடங்குளம் திட்டத்துக்காக நிலம் எடுத்து வேலை தரேன்னு ஏமாத்தினாங்க. இன்னைக்கு அந்தக் கிராம மக்களுக்கு இரண்டாம்தர வேலைதான் தரப்படுது. அதுவும் கூட மிக மிகச் சொற்ப ஆட்களுக்குத்தான். நல்ல சம்பளத்தோடு வேலை யாருக்குத் தெரியுமா? மும்பையிலேர்ந்தும் டெல்லிலேர்ந்தும் வர்ற சீமான்களுக்கு. அப்படித்தான் ஆகும் டாடா திட்டமும். எங்க பகுதி மக்கள் கொதிக்கப்போய் இருக்காங்க. இன்னும் அவங்களோட வேதனையைத் தூண்டுற மாதிரி அரசாங்கம் நடந்தா விளைவுகள் விபரீதமாகப் போறது உறுதி.

றும் சொல்கிறார்கள். இது சரி என்றால், மொத்த திட்டமே லாபகரமாக இருக்க வாய்ப்பில்லை.

உலக அளவில் இதுபோன்ற தொழிற்சாலைகள் மிக நவீன முறையைப் பயன்படுத்துவதால் ஐநூறு பேருக்கு மேல் வேலைக்கு ஆட்கள் தேவைப்படாது. டாடாக்கள் மண்ணையும் வெட்டியெடுக்கும் பட்சத்தில் மொத்தத்தில் 750 பேருக்கு வேலை கிடைத்தால் அதிகம். ஆனால், நிலங்களை 20000 குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் கொடுக்க வேண்டும் என்பது குறிப்பிடத்தக்கது. இதுபோன்ற தொழிற்சாலைகளின் ஆயுள் அதிகபட்சம் 50 வருடங்கள்தான் என்பது கவனத்தில் கொள்ள வேண்டிய முக்கியமான விஷயம். - ப்ரியன்

**சந்திரா** *(குடும்பத் தலைவி)* : எங்க ஊரு பொண்ணுன்னு ராதிகா செல்விக்கு வோட்டுப் போட்டு எம்.பி. ஆக்கினோம். வயித்துல குழந்தைய வச்சுக்கிட்டு வந்து நின்னாங்க. மனசு இறங்கி வெற்றியடைய வெச்சோம். இன்னைக்கு எங்க கோரிக்கைய அவங்களால காது கொடுத்துக் கேக்க முடியல. பேரணிக்கு வந்தவங்க காரை நிறுத்தச் சொல்லி கத்த றோம்னுகூட பார்க்காம விருட்னு போறாங்க. என்னைக்கு எங்க உணர்வுகள மதிக்காம அரசியல்வாதிங்க ஃபேக்டரிய கொண்டு வர நினைக்குறாங்களோ, அன்னைக்கே அவங்கள மனசுல இருந்து தூக்கி எறிஞ்சுட்டோம்.

**சக்தி** *(விவசாயக் கூலி)*: டாட்டாதானே நிலம் கேக்கு றான், அவன்தானே எங்ககிட்ட வரணும். இதுவரைக்கும் எவ னும் வரலையே. அரசாங்க ஆட்கள்தான் வர்றாங்க. கம்மியா விலை பேசுறாங்க. நேரடியா பேச வேண்டியதுதானே. லட்சக் கணக்குல போற இடத்தை ஆயிரக்கணக்குல யாராவது அள்ளித் தருவாங்களா?


* செல்வன்


* சத்யபாமா

**சுமதி** *(குடும்பத் தலைவி)* : இன்னைக்கு நாங்க காசு வாங் கிட்டு கொடுத்துடறோம்னு வைங்க... எத்தினி நாள் ஒழுங்கா வாழ்வோம்னு நினைக்கறீங்க? அதிகபட்சம் ஒரு வருஷத்துக்கு மேல நிலைமை தாங்காது. பணம் பாக்காத ஜனங்க, மொத்தமா பாத்தா பொத்தியா வைக்கும்..? குடிகார புருஷன் ஒருத்தன் போதும் கொண்டு போய் நாச மாக்க! அப்புறம் சோத்துக்கு நாங்க பிச்சை தான் எடுக்கணும். எதுக்கு இந்த நாதியத்த பொழப்பு? பேசாம நிலத்தையே வச்சு கஞ்சி குடிச்சிட்டுப் போறோம். ஒரு வேளை சாப் பிட்டாலும் அதுதான் உசுருல ஒட்டும். டாட்டாவுக்கு மண்ணு கொடுத்தா நாளைக்கு சோறு போட்ட இதே மண்ணால நோய் வந்து தான் சாகணும். இந்த வேதனை தேவை தானா?

**ம**க்கள் கருத்து இப்படிப் பலவாறாக இருக்க, இங்கு வந்து கருத்துக் கேட்கும் அரசியல் கட்சிகள் நேரிடையாக மக்களிடம் செல்வதில்லை. ஏதோ ஓர் இடத்தில் மேடை போட்டுப் பேசுகிறார்கள். அங்கே குழுமி யிருக்கும் கூட்டத்தைப் பார்த்து, தொழிற் சாலை வேண்டுமா, வேண்டாமா என்று கை உயர்த்தச் சொல்கிறார்கள். தலைவரின் மனநிலைக்கேற்ப கைகள் உயர்கின்றன அல் லது தாழ்கின்றன. காரணம், கூட்டத்துக்கு வந்திருப்போர் பொதுமக்கள் அல்ல... சம்பந்தப்பட்ட கட்சியின் தொண்டர்கள்! பா.ம.க.வைச் சேர்ந்த சாத்தான்குளப் பெண் மணி ஒருவர், ராமதாஸ் கலந்துகொண்ட கூட்டத்துக்குப் போய் தொழிற்சாலை வரக் கூடாதென்று குரல் கொடுத்து விட்டு, நம்மிடம் ''வந்தால்தாங்க நல்லது. ஆனா, கட்சியில இருக் கறதால என்னால அதை வெளிப் படையாச் சொல்ல முடியலை...'' என்றார் கூலாக.

தாங்கள் உண்டு தங்கள் வேலை உண்டு என்று இருந்த சாத்தான்குளம், தட்டார்மடம், திசையன்விளை கிராம மக்கள், இன்று அரசியல்வாதிகளின் பிடி யில் சிக்குண்டு மெல்லவும் முடி யாமல் விழுங்கவும் முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். வேண்டுமென் றால் இங்கிருந்தும், வேண்டாமென்றால் அங்கிருந்தும் மாறிமாறி வரத் தயாராக இருக்கும் பல முனைத் தாக்குதலுக்கு பயந்து ஓடிக் கொண்டிருக்கிறது அவர்களின் வாழ்க்கை. டாடா தொழிற்சாலையின் பயன் பாடு ஐம்பதாண்டுகளுக்குத்தான் எனில், (காண்க பெட்டிச் செய்தி) அதன்பிறகு நிலத்தை என்ன செய்வார்கள்? அதில் விவ சாயம் தொடர முடியுமா? அது பற்றி யெல்லாம் யார் யோசிக்கிறார்கள்!

எங்க ஊர்லயும் ஃபேக்டரி வந்தாத்தானே நாங்களும் நாலு காசு சம்பாதிக்க முடியும்!

– **மு.மாறன்**

அட்டை மற்றும் படங்கள் :
**பொள்ளாச்சி சுந்தரம்**

# கிரேஸியைக்

★ த.சத்தியநாராயணன், அயன்புரம்

***ஆகஸ்ட் 15-ல் பிறந்தநாள் காணும் எனக்கு கிரேஸியாரின் வாழ்த்து என்ன..?***

ஒரு பயல் 'கேள்வி' கேட்க முடியாத அளவுக்கு உயர்வும்... உங்களுக்குப் 'பதிலாக' அயன்புரத்தில் வேறு ஆள் கிடையாது என்னும் அளவுக்கு அந்தஸ்தும் உங்களுக்குக் கிடைக்க பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

★ வே.ந.கதிர்வேல், வேலூர்

***கிரேஸி சார்..! நீங்க வீட்ல எலி, வெளில புலி டைப்பா? அல்லது வீட்டுல புலி, வெளில எலி டைப்பா...?***

நான் வீட்டுல 'லேஸி' வெளில 'க்ரேஸி' டைப்!

★ எஸ். சங்கர், மதுரை

***ஜால்ரா போடுவது, காக்கா பிடிப்பது, பாலிஷ் பண்ணுவது, முகஸ்துதி இவற்றில் எளிதானது எது...?***

எளிதை விடுங்கள். எளிமையானது, மேலும் இவையெல்லாவற்றையும்விட கௌரவமானது 'அம்மா தாயே' என்று பிச்சை எடுப்பதுதான்.




★ மதுரை முருகேசன், திருச்சி

***நியூமராலஜியில் தங்களுக்கு நம்பிக்கை உண்டா?***

நான் நம்புவது ஹ்யூமராலஜி!

★ வனிதா, டெல்லி

***கிரேஸிக்கு பரதநாட்டியம் ஆட வருமா...?***

என்ன அப்படி கேட்டுட்டீங்க...? பரத நாட்டியம் முறையாகப் பயின்று உங்க ஊர் சுப்புடுவே வியக்கும் அளவுக்கு அரங்கேற்றமும் செய்தேன். என் துரதிருஷ்டம் எனது அரங்கேற்றத்தை யாரும் பார்க்க முடியாமல் போய்விட்டது. காரணம் நான் ஆடியது ஆல்-இந்தியா ரேடியோவில். கொத்தமங்கலம் சுப்பு மட்டும் எனது ஆட்டத்தைப் பார்த்திருந்தால், சத்தியமா 'தில்லானா (கிரேஸி) மோகனாம்பாள்' என்று புதுசாக ஒரு கதையே எழுதியிருப்பார்.

★ சங்கர், திருப்பரங்குன்றம்

***அதிக சந்தோஷத்தின்போது அழுகை வருகிறது. ஆனால், அதிக துக்கத்தின் போது சிரிப்பு வருவதில்லையே..?***

'அளவுக்கு மீறினால் அமிர்தமும் விஷமாகும்' இது ஆனைக்கு அர்ரம்... உடனே, குதிரைக்கு குர்ரமாக, 'அளவுக்கு மீறிய விஷம் அமிர்தமாகும்' என்று சொல்ல முடியுமா...? பாதாம் - அல்வா அதிகமாகச் சாப்பிட்டால் பயங்கரமாக வயிற்றை வலிக்கும். அதற்காக, பயங்கரமான வயிற்று வலி பாதாம் அல்வா போல இனிக்கும் என்று கூற முடியுமா? ஆனால் ஒன்று... சமீபத்தில் திருமணமான எனது நண்பனைக் காணச் சென்றிருந்தேன். அவனது புது மனைவி தந்த காஃபி இந்த மோகனுக்கு விஷம்போல இருந்தது. மோகத்தில் இருந்த நண்பனோ, அதை அமிர்தமாக எண்ணி அருந்தினான். அந்த

துக்கத்தில் எனக்குச் சிரிப்பு வந்தது.

★ டி.ஜி.எஸ்., நெல்லை

*ஹைக்கூ எப்படித் தோன்றியது? அதன் பிறப்பிடம் என்ன..?*

ஜப்பானில் தோன்றியது... அதனால் தானோ என்னமோ ஹைக்கூ அவர்கள் சைசுக்குச் சின்னதாக இருக்கிறது... சுமார் இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பே, நாம் நம் வாழ்நாளில் கற்க முடியாத உலகளவை, கையளவு ஒன்றரை அடியில் இலக்கணச் சுத்தத்தோடு, உள்ளங்கை நெல்லிக்கனியாக வைத்தவர் வள்ளுவர். குறள், ஹைக்கூவையும் மிஞ்சிய 'HIGH-IQ'...

★ கு.சங்கரி, சென்னை

*'கிரேஸி' என்ற அடைமொழி உங்களை அடைந்தது எப்படி...?*

அது என்னமோ தெரியவில்லை, ஒவ்வொரு கட்டத்திலும் எனது எல்லா வெற்றிகளுக்கும் பின்னால் ஒரு ஸ்ரீனிவாசன் இருப்பார். பால்யத்தில் என்னை வளர்த்தது தாய்மாமன் ஸ்ரீனிவாசன். பள்ளி நாட்களில் நான் காப்பியடிக்க வசதியாக, என் பக்கத்து சீட்டில் படித்த ஸ்ரீனிவாசன். நாடகத் துறையில் எனது வலதுகரமாக விளங்கும் நண்பன் ஸ்ரீனிவாசன். சினிமாத் துறையில் என்னைச் சீராட்டியது முக்தா ஸ்ரீனிவாசன்... தொடர்ந்து என்னை உச்சியில் கொண்டுபோய் நிறுத்தியது பரமக்குடி ஸ்ரீனிவாசன் பெற்ற கமலஹாசன். பத்திரிகைத் துறையில் என்னைப் பதப்படுத்தியது ஸ்ரீனிவாசன் (எஸ்.எஸ்.வாசன்) ஸ்தாபித்த ஆனந்த விகடன்...'கிரேஸி' என்ற இலவச இணைப்பை எனக்கு அளித்த புண்ணியவானும், அந்நாளைய ஆனந்த விகடன் பொறுப்பாசிரியர் ஸ்ரீனிவாசன் (வீயெஸ்வீ)... எனது ஸ்ரீனிவாச புராணம் முழுவதும் சொல்ல வேண்டுமென்றால் எனக்கு கல்கி தீபாவளி மலர் தேவைப்படும். ●



# காத்திருக்கும் ராஜ மார்கம்!

அபூர்வ ராகம் ஒன்றினை அனாயாசமாக ஆலாபனை பண்ணுகிறார் அந்த இளம் பெண். மைசூரில், வீணை சேஷண்ணா அரங்கில் கூடியிருக்கும் சிறிய ரசிகர் கூட்டம் வியந்து கரவொலி எழுப்புகிறது.

''இது என்ன ராகம்...?'' - ரசிகர்களிடையேயிருந்து எழும் குரலுக்கு, ''சமுத்ரப்ரியா'' என்று பதில் சொல்லிவிட்டுக் கச்சேரியைத் தொடர்கிறார் மேகனா மூர்த்தி.



* மேகனா மூர்த்திக்கு எம்.எஸ்.விருது...

பிரதான ராகமான கரஹரப்ரியா ஆலாபனையும் அதைத் தொடர்ந்து 'சக்கனி ராஜமார்கமு' கீர்த்தனையும் கனமான பிடிகளுடனும் சுத்தமான சங்கதிகளுடனும் வெளிப்படுகின்றன.

பிசுபிசுவென்று பறக்காமல் அழுத்தமாக வெளிப்படும் குரல் மேகனாவுடையது. நல்ல பாடாந்திரம் (ஆசிரியர்கள்: ஸ்ரீவித்யா வெங்கடாசலம், ஜி.வெங்கட்ராமன்). கச்சேரி அமைப்பை இன்னும் கச்சிதப்படுத்திக் கொண்டால் மேகனாவின் சங்கீதம் மேலும் பரிமளிக்கும். அதோடு பாவத்தையும் கூட்டினால், இசையுலகில் அவருக்கு 'சக்கனி ராஜமார்கம்'தான்!

இந்தத் திறமையை அடையாளம் கண்டுதான், ஹ்ருதய பாவ இசையைப் பொழிந்த எம்.எஸ்.சுப்புலட்சுமி நினைவு விருது அவருக்கு வழங்கப்பட்டிருக்கிறது. விருது வழங்கும் விழாவைத் தொடர்ந்தே மேகனாவின் கச்சேரி நடைபெற்றது. பாரதரத்னா எம்.எஸ்.ஸின் பரம ரசிகர்களும் குடும்ப நண்பர்களுமான ஒய்.டி.தாத்தாச்சாரி- மாதுரி தம்பதியின் பிரமரா அறக்கட்டளை நிறுவியுள்ள விருது இது. பிரமரா என்றால் வண்டு. தேடித் தேடித் தேனை அருந்தும் வண்டைப் போல, தேடித் தேடித் திறமையை இனங்கண்டு ஊக்குவிப்பதை நோக்கமாகக் கொண்டிருக்கிறது பிரமரா அறக்கட்டளை. எம்.எஸ்.விருதுக்கான தேர்வு, தலைசிறந்த நிபுணர்களை நடுவர்களாகக் கொண்டு மிக கவனமாகச் செய்யப்படுகிறது. விருது வழங்கும் விழாவை நடத்த மைசூர் கான பாரதி சபா மேடை அளித்து அன்புடன் ஒத்துழைக்கிறது.

விஞ்ஞானி ஒய்.டி. தாத்தாச்சாரி தேர்ந்த ஆராய்ச்சியாளர்; உயர்ந்த மனிதர். அவர் நினைவாக பிரமரா அறக்கட்டளையைத் திறம்பட நடத்தும் மாதுரி தாத்தாச்சாரி, சிறந்த விஞ்ஞான ஆராய்ச்சியாளருக்கும் கன்னட இலக்கிய கர்த்தாவுக்கும்கூட ஆண்டுதோறும் விருது வழங்கி வருகிறார். ''தமிழ் இலக்கிய பங்களிப்புக்கும் ஒரு விருது நிறுவ விரும்புகிறோம்'' என்கிறார் மாதுரி.

மைசூரில் நடந்த எம்.எஸ். விருது வழங்கும் விழாவில், உள்ளூர்ப் பிரமுகர்கள், அரசு அதிகாரிகள், கலை ஆர்வலர்களுடன் கல்கி ஆசிரியரும் கலந்துகொண்டார்.

ஜகத்குரு சிவராத்திரி தேசிகேந்திர மஹா ஸ்வாமிகள் இந்நிகழ்ச்சியில் ஆசியுரை வழங்கியதுடன், ''ஸ்ரீமதி மாதுரியை முன்மாதிரியாகக் கொண்டு பலர் தொண்டுள்ளத்துடன் பொதுப் பணிகளில் பங்கேற்க முன்வர வேண்டும்'' என்றும் விண்ணப்பித்துக் கொண்டார்!

- பத்மாவதி

டாக்டர் ராஜேந்திரன் குடல், இரைப்பை மருத்துவர் என்பதோடு லேசர் சிகிச்சை நிபுணரும்கூட. தற்கால மருத்துவத்தில் லேசர் எந்த அளவு முக்கியப் பங்கு வகிக்கிறது என்பதை அவர் கூறக் கேட்கையில் நமக்கு வியப்பு அதிகமாகிறது.

“லேசர் என்பது என்ன? சக்திவாய்ந்த ஒளி. இதன் சக்தி மேலும் மேலும் அதிகப் படுத்தப்படும்போது வெப்பம் உருவா கிறது. பத்தாயிரம் டிகிரி சென்டிகிரேட் அளவுக்கு (கிட்டத்தட்ட சூரியன்) இதை அதிகப்படுத்தலாம். ஒளிக்கற்றையாக லேசரை சீராக அனுப்பும்போது வெப்ப சக்தியை அது தனக்குள் எடுத்துச் செல்கிறது.

எங்கள் துறையில் கட்டிகளை ஆவியாக்கவே பெரும்பாலும் லேசர் பயன்படுத்தப்படுகிறது. மூல நோய் என்பது ஆசனவாய்ப் பகுதியில் உள்ள ஒரு ரத்தக்குழாய் வீக்கம் தான். லேசரைப் பயன்படுத்துவதன் மூலம் அங்கு ரத்தத்தை உறையச் செய்து வீங்கிய பகுதியை நீக்கலாம்.

தற்போது அழகுபடுத்திக்கொள்ளும் சிகிச்சையிலும் லேசர் முக்கிய பங்கு வகிக் கிறது. ரோமங்களை லேசர் நீக்கும் அழகே அழகு. அப்படியே வேரிலிருந்து தோண்டி எடுப்பதுபோல இந்தக் காரியத்தை அது செய்கிறது. முன்பெல்லாம் பெண்கள் மட்

# லேசுபட்டதல்ல லேசர்!

டுமே தங்கள் மேல் உதட்டுக்கு மேல் வளர்ந்த பூனை முடியை நீக்குவதற்கு இந்த சிகிச்சைக்கு முன் வருவார்கள். இப்போது ஆண்களும் லேசர் அழகு சிகிச்சைக்கு வருகிறார்கள்!

வெவ்வேறு அளவிலான வெப்ப சக் திக்கு வெவ்வேறு பயன்கள் உண்டு. ஒரு குறிப்பிட்ட வெப்ப சக்தி கொண்ட லேசர், கட்டியை ஆவியாக்கும். வேறொரு வகை வெப்ப சக்தி, அதை உறைய வைக்கும். மூன்றாவது வகை அதை வெட்டி நீக்கும்.

ND YAG (Neodymium Yitrium Al Garnet) என்பது ஒரு வகைப் படிகம். இதில் ஒளி செலுத்தப்படும்போது லேசர் பிறக் கிறது. ஒளியின் சக்தி, அலைவரிசை ஆகிய இரண்டையும் பொருத்து லேசரைப் பல விதங்களில் பயன்படுத்த முடியும்.

கண்களில் லேசர் சிகிச்சை செய் யும்போது அந்த லேசர் சக்தி வெறும் மைக்ரோ மில்லி வோல்ட் அளவுதான் இருக்கும்.

முகத்தில் சிலருக்குச் சதை தொங்கும். இதற்குக் காரணம் ‘கனெக்டிவ் டிஷ்யூ’ என்ற திசுக்கள் தங்கள் உறுதியை இழப்பது தான். இதைச் சீராக்கவும் லேசர் பயன்படு கிறது. ஏதோ அழுக்கு எடுப்பதுபோல் செயல் பட்டு முகத்துக்குப் புதுப் பொலிவைத் தரு கிறது. தோலில் உள்ள மெலனின் பிக் மென்ட்டுகளையும் லேசரால் நீக்கி முகத் தின் நிறத்தையும் மாற்ற முடியும்.

சிலர் சிறுவயதில் பச்சை குத்திக் கொண்டிருப்பார்கள். அதை நீக்குவதும் லேசரால் சாத்தியம்தான். அதற் கென்று வேறொரு அலைவரிசை,

அவ்வளவே. பச்சைப் பகுதிகளை அப்படியே உறிஞ்சி எடுத்துக் கொள்கிறது லேசர்!

விழித்திரையில் (RETINA) ரத்தம் கசிவது ஆபத்தானது. பார்வையே பறிபோகலாம். லேசர் ஒளி,



கார்னியா, லென்ஸ் இவற்றைத் தாண்டி உள்ளே சென்று, விழித்திரையில் ரத்தம் கசியும் இடத்தை அடைக்கிறது. ஆக லேசர் ஒளியால் பார்வை பாதுகாக்கப்படுகிறது.

'லேசர் நானோமீட்டர்' எனப்படும் மிக மிகக் குறைந்த லேசர் அலைவரிசை கொண்ட கருவி தொடர்பான ஆராய்ச்சிகளைச் செய்து வருகிறோம். இது வெற்றி அடைந்தால் புற்றுநோய்களைக்கூட கட்டுப்படுத்திவிட முடியும்.

இப்போது எண்டோஸ்கோப் என்பது உடலுக்குள் உள்ள பாதிப்புகளைக் கண்டு பிடிக்க மட்டுமல்ல, குணப்படுத்தவும் செய்கிறது. எண்டோ-லேசர் எனப்படும் கதிர்களை எண்டோஸ்கோப் மூலமாகவே அனுப்பி உணவுக் குழாய் மற்றும் மலக் குடலில் உள்ள கட்டிகளை நீக்க முடியும்.

புற்றுநோய்க் கட்டிகளின் அளவை இது குறைப்பதால், அதிகப்படியாக இரண்டு மூன்று வருடங்கள் வாழலாம்.

இருபது வருடங்களுக்கு முன் நான் மருத்துவத்தில் என்னவெல்லாம் நடக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேனோ அதெல்லாம் இப்போது நடக்கிறது. விதவிதமான அலை வரிசை கொண்ட லேசர் கருவிகளை வடிவமைக்க முடிந்ததால் இது சாத்தியமாகியிருக்கிறது.

அந்தக் காலத்திலிருந்தே ஒளிக்கு நாம் மிகவும் முக்கியத்துவம் கொடுத்து வருகிறோம். விளக்கை வழிபட்டிருக்கிறோம். சூரியனை வணங்கி இருக்கிறோம். லேசரும் சந்தேகமில்லாமல் கையெடுத்துக் கும்பிட வேண்டிய ஒன்றுதான். புற்றுநோய்க் கட்டிகளை லேசர் புகையாக்கும் நேரம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. அப்போது லேசரின் அருமையை இன்னும் மிக அதிக அளவில் புரிந்துகொள்வோம்."

**- ஜி.எஸ்.எஸ்**



# கல்கி



2007 ஆகஸ்ட் 26
சர்வஜித் ஆவணி 9
மலர் : 66
இதழ் : 4

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

*- பாரதியார்*

## வல்லரசா; நல்லரசா?

சுதந்திர தின வைர விழாவில், ''பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் மறைய வேண்டும்; முன்னேற்றத்தின் பலன் கடைநிலை இந்தியனையும் சென்றடைய வேண்டும்'' என்று உரையாற்றியிருக்கிறார் குடியரசுத் தலைவர் பிரதிபா பாடீல்.

நாளிதழில், அச்செய்தியையொட்டியே தென்காசியில் ஹிந்து - முஸ்லிம் கலவரத்தில் ஆறு பேர் இறந்துபோன செய்தியும் வெளியாகியிருக்கிறது. இந்தச் சூழ்நிலையில் சுதந்திர தின வைர விழாவை மகிழ்ச்சி - மனநிறைவோடு எப்படிக் கொண்டாடுவது!

ஆண்டுதோறும் ஒன்பது சதவிகித வளர்ச்சி காண்கிறது நம் நாடு என்பது புள்ளிவிவரம். ஆனால், கல்வி அமைச்சகத்தின் ஆய்வறிக்கை ஒன்று, 32,000 பள்ளிகளில் மாணவர்களே இல்லை என்றும் 23,000 பள்ளிகளில் ஆசிரியர்களே இல்லை என்றும் தெரிவிக்கிறது! கழிப்பறைகளும் கரும்பலகைகளும் இல்லாத பள்ளிகள் பல்லாயிரக்கணக்கில் உள்ளன. பொருளாதார வளர்ச்சி குறித்துப் பெருமிதம்கொள்ளும் நாட்டில், இதைவிடப் பெரிய தலைகுனிவு என்ன இருக்க முடியும்?

கடந்த அறுபது ஆண்டுகளில் பொருளாதார வளர்ச்சிக்கும் தொழில் வளர்ச்சிக்கும் எடுக்கப்பட்ட முயற்சிகளை நாம் குறைத்து மதிப்பிட்டுவிட முடியாது. அதே கவனம் கல்வித் துறையிலும் கிராம மக்கள் முன்னேற்றத்திலும் செலுத்தப்பட்டிருந்தால், பொருளாதார வளர்ச்சியின் பயன் நாடு முழுவதும் சமச்சீராகப் பரவியிருக்கும்.

ரோஷமான குத்துச்சண்டை!

கூட்டணி

எதிர்ப்பு

எதிர்ப்பு




விவசாயிகளின் பாடு பெரும்பாலும் திண்டாட்டமாகவே இருந்து வருகிறது. விவசாய வேலை கிடைக்காததாலோ, விவசாயம் கட்டுப்படியாகாததால் நில-புலங்களை விற்று விட்டோ நகரங்களுக்குப் பிழைக்க வருவோர், கூலி வேலை செய்யும் தெருவாசிகளாகி விடுகின்றனர். இவர்களுக்குக் கௌரவமான வாழ்க்கையும் இவர்களுடைய குழந்தைகளுக்கு முறையான கல்வியும் சொந்த கிராமத்திலேயே அளிக்க நாம் முயற்சி செய்யவில்லை.

இட ஒதுக்கீடு என்கிற சலுகையைத் திணித்தது நீங்கலாக, கல்வித்துறைக்கு எந்த கவனமும் தரப்படவில்லை. இந்த ஒதுக்கீடும் அரசியல் உள்நோக்கம் கொண்டதாக இருந்ததால் பயன் தரவில்லை. கால வரையறையின்றி அதை நீட்டிக்க, அரசியல் சக்திகள் எடுத்து வரும் முயற்சிகளை உச்சநீதிமன்றமே கண்டனம் செய்திருக்கிறது. போதாக்குறைக்கு, எல்லா துறைகளிலும் புகுந்துவிட்ட லஞ்ச-ஊழல், கல்வித் துறையையும் அடி முதல் நுனி வரை சீரழித்திருக்கிறது.

உலகின் மிகப்பெரிய ஜனநாயக நாடு என்று நாம் பெருமை கொள்கிறோம். ஆனால், தங்கள் உரிமைகளை முறையாகப் பயன்படுத்தும் அறிவையும் ஆற்றலையும் மக்களுக்குத் திட்டமிட்டு மறுத்திருக்கிறார்கள் அரசியல்வாதிகள். தலைவர்களின் சொற்சிலம்பத்தால் கவரப்பட்டு வாக்களித்துவிடும் மக்கள், அறியாமையில் தொடர்ந்து உழல்கிறார்கள். குறிப்பாக கிராமப்புறங்களின் நிலைமை பரிதாபகரமானது. அங்கு சுகாதாரம், சுய கௌரவம் ஆகியன இன்னமும் பெரும்பான்மையினருக்கு எட்டாக் கனிதான்.

சுகாதாரம் பேணவும் சுயகௌரவம் போற்றவும் கற்றுத்தந்து, ஜாதி - மதம் கடந்த சகோதரத்துவத்தையும் தேச பக்தியையும் தன்னம்பிக்கையையும் ஊட்டுகிற கல்விமுறை, இந்தியாவில் ஒவ்வொரு குடிமகனுக்கும் பிறப்புரிமையாக வேண்டும். அது அரசியல் சாசனத்தில் இருந்தால் போதாது; அதுவே நடப்புரிமையாகவும் மலர வேண்டும். இதற்காக அரசுத் திட்டங்களும் முன்னுரிமைகளும் மாற்றி எழுதப்படத்தான் வேண்டும்.

இந்தியா முதலில் தன் மக்களை மதித்து நன்மக்களாக உயர்த்தட்டும்; அதன் பிறகு வல்லரசாக வலிமை பெறுவது குறித்து யோசிக்கலாம். ●



தங்கரோட மனைவியா வர்ற மீனாள், இயல்பின் இன்னொரு பக்கம். ஷ்ரேயா கதாபாத்திரம் தான் கொஞ்சம் முரண்பாடா தெரியுது. டீச்சரே விடலைக் காதலுக்குத் துணை போறது தப்பில்லையா? ஆனா குறை சொல்ல முடியாம நடிச்சிருக்காங்க. எல்லாத்துக்கும் மேல கோகிலா டீச்சர்! பொங்கிப் பிரவகிக்குற சிநேகாவோட ஆர்வத்துக்குச் சரியான தீனி! ஆடு, மாடு, தாவரங்களைக்கூட நடிக்க வச்சிருக்காரு தங்கர்.

பள்ளிக்கூட நாட்கள்தான் ஒரு மனுஷனோட உச்சபட்ச சந்தோஷ நாட்கள்னு இதயம் தொடும் விதமா சொல்லியிருக்கிற படம்.

'ஐயோடி' கொமாரு கேரக்டர்ல கிராமத்தானாவே வாழ்ந்திருக்காரு தங்கர். நண்பனோட பழைய துணிகளைப் பார்த்து அவர் படுற ஆனந்தக் கெக்கலிப்பு, ஜிலீர் பூங்கொத்துச் சிரிப்பு. பொய் சொல்லிட்டு மருகறதும், உரிமையோடு நண்பர்களை அடிக்கறதும் அணைக்கறதும்னு நட்பை ரொம்ப அழகா காட்டி ஏங்க வச்சிருக்காரு. விசிட்டிங் கார்டு கேக்கற ப்யூன் கிட்ட மணியைத் தந்து அனுப்பறப்போ மனசுக்குள் மழைச் சாரல்.

கலெக்டராவும், டைரக்டராவும் வர்ற நரேனும் சீமானும் அந்தந்த கதாபாத்திரங்களாவே மாறிட்டாங்க. காதல் காலங்கல்ல மழலையாவும், கடமை நேரத்துல மிடுக்காவும் உணர்வு புரிஞ்சுக்கப்படாம போகும்போது அனலாவும் கலங்கடிக்கிறார் நரேன். சிக்கன வசனங்கள் பேசி நடிகராவும் முத்திரை பதிக்கிறார் சீமான்.

பரத்வாஜ் இசையில் பாடல்கள் ரம்யமா இருக்கு. ஒளிஓவியம், உள்ளம் தொடும் கரையோரக் கடல் அலை. மனதைத் தொடும் காட்சிகளை படம் முழுக்கப் பதிவு செய்திருக்குற இயக்குநர், க்ளைமாக்ஸை மென்மையின் உச்சமாய்ப் படைச்சிருக்கார். ஆனாலும் அங்கங்கே சில குறைகள் - அரிசியில் தென்படும் கற்களாய்.

சினிமா டைரக்டரா சீமானைக் காட்டினது ஓ.கே. ஆனா அவர் பண்ற படப்பாடலை இந்தளவு காமெடியா காட்டியிருக்கணுமா? தேவையில்லாத இளவயதுக் காதல் பாட்டு... அதுவும் விரசமா! ஜென்சி டீச்சர்கிட்ட மாணவர்களோட குறும்புக் காட்சிகளிலும் ரசனைக் குறைவு... இப்படி அங்கங்கே சில அவஸ்தைகள்... இருந்தாலும் யதார்த்தமான சினிமா தந்ததுக்காக தங்கரை தாராளமா உச்சி முகரலாம்!

– நிதர்ஸனா

# பள்ளிக்கூடம்



**சோ**

எழுதிய

# மஹாபாரதம்

பேசுகிறது

பாரதக் கதை பழமை வாய்ந்தது. ஆனால் அதை எழுதியிருக்கும் விதம் மிகவும் புதுமையானது. 1304 பக்கங்களில்; வியாச பாரதத்தின் சுருக்கம்; 18 பர்வங்களில் வரும் முக்கிய நிகழ்ச்சிகள்; பாரதக் கதை நடந்திருக்கக்கூடும் என்பதற்கான வழக்கறிஞர் 'சோ'வின் ஆணித்தரமான வாதம்; பலரும் கேட்டிராத நுணுக்கமான அரிய தகவல்களை விளக்கி; முக்கிய இடங்களில் பாரத நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங் களையும் விமர்சித்து, இன்றைய நிகழ்வுகளோடு ஒப்பிட்டுக் கூறியிருக்கும் விதம் புதுமையானது.

இரண்டு பாகங்கள் - விலை ரூ.600/-

# ஹிந்து மஹா சமுத்திரம்

வேதங்கள், உபநிஷத்துக்கள், வேதாந்தம், சாத்திரம், புராணங்கள், ஆலயங்கள், பக்தி, சரித்திரம், நீதி, சட்டம், சமூக சிந்தனை, விஞ்ஞானம், கணிதம், இலக்கியம், வான சாத்திரம் என்று விரிந்து... ஆழ்ந்து, அகன்ற இந்த சமுத்திரத்தை அதன் கரையோரத்தில் நின்று பார்த்தவரின் பிரமிப்பு!

முதல் பாகம் விலை. ரூ.175/-

# வால்மீகி ராமாயணம்

வால்மீகி முனிவரால் எழுதப்பட்ட ராமாயணம் எனும் இதிகாசத்தை - சுருக்கமாகவும், மிகவும் எளிய நடையிலும் சோ அவர்கள் எழுதியுள்ளார். மேலும் சில முக்கியமான இடங்களில் வால்மீகி ராமாயணம் - கம்ப ராமாயணம் மற்றும் துளசிதாஸரின் ராமாயணங்களை விட எப்படி வேறுபட்டுள்ளது என்பதையும், அப்படி விளக்கும் போது ஆங்காங்கே கம்பரின் வாக்கியத்தி லுள்ள தமிழ் அழகையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

விலை ரூ.500/-

# இந்து தர்மம்

காஞ்சி காமகோடி பூஜ்ய ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் அருளுரைகளின் சுருக்கம்.

விலை ரூ.60/-

# அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்

ராஜாஜி, மொரார்ஜி தேசாய், இந்திரா காந்தி, சந்திரசேகர், அத்வானி, காமராஜ், அண்ணாதுரை, எம்.ஜி.ஆர், கருணாநிதி, என்.டி.ஆர்., ஜெயலலிதா போன்ற ஏராளமான அரசியல் தலைவர்கள், மற்றும் சினிமா, பத்திரிகைப் பிரமுகர்களுடன் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை விளக்கியுள்ளார். விலை ரூ.120/-

## கருத்தாழம் மிக்க நகைச்சுவை நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | வெறுக்கத்தக்கதா பிராமணீயம் | 35.00 |
| 2. | இந்து தர்மம் | 65.00 |
| 3. | வந்தே மாதரம் | 115.00 |
| 4. | வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 |
| 5. | சர்க்கார் புகுந்த வீடு | 100.00 |
| 6. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 |
| 7. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 45.00 |
| 8. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 27.00 |
| 9. | துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 |
| 10. | அதிகப் பிரசங்கம் | 32.00 |
| 11. | இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | |
| 12. | யாரோ இவர் யாரோ? | 65.00 |
| 13. | சாதல் இல்லையேல் காதல் | 80.00 |
| 14. | மைடியர் பிரம்ம தேவா | 30.00 |
| 15. | இந்தியா எங்கே போகிறது? | 20.00 |
| 16. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 1 | 24.00 |
| 17. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 2 | 45.00 |
| 18. | ஒண்ணரை பக்க நாளேடு பாகம் 1 | 40.00 |
| 19. | காமராஜை சந்தித்தேன் | 60.00 |
| 20. | புரட்சி கீதை | 35.00 |
| 21. | திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 45.00 |
| 22. | யாருக்கும் வெட்கமில்லை | 40.00 |
| 23. | சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 24. | எங்கே போகிறாய்? | 40.00 |
| 25. | என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 26. | இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 27. | இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 28. | சாத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 29. | சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 30. | ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 31. | நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 32. | மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 33. | ஏன் கூடாது? | 40.00 |
| 34. | இரவில் சென்னை | 40.00 |
| 35. | முகமது பின்துக்ளக் | 35.00 |
| 36. | உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 37. | சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 38. | எதற்காக? | 35.00 |
| 39. | உண்மையே உன் விலை என்ன? | 37.00 |

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்மைல் ப்ளீஸ் | சத்யா | ரூ. 40.00 |
| 2. | அரசியல் கலையை அறிந்து கொள்வோம் | " | ரூ. 40.00 |
| 3. | நையாண்டிக் கட்டுரைகள் | " | ரூ. 40.00 |
| 4. | அரசியலும் நகைச்சுவையும் | " | ரூ. 32.00 |
| 5. | நாடு தழுவிய நகைச்சுவை | " | ரூ. 50.00 |
| 6. | மடசாமியின் மனசாட்சி | " | ரூ.100.00 |

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

அல்லயன்ஸ்

ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால்பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,
சென்னை - 4. தொலைபேசி : 24641314
e-mail : www.alliancebook.com
visit us at: Srinivasan@alliancebook.com



டாவே ஆடுங்க!'' என்று அன்பு வேண்டுகோள் விடுத்தார் கணேஷ்ராம்.

வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த மீனவ மக்களும், சென்னை இளவட்டங்களும் கைதட்டி, விசில் அடித்து சேப்பாக்கம் ஒன் டே கிரிக்கெட் மேட்ச் போல ரசித்தார்கள்.

அதற்குள் அடுத்து சென்னைப் பெண்கள் பாண்டி ஆடப்போகிறார்கள் என்ற செய்தி பரவியதும், நெமிலிக்குப்பமே வேடிக்கை பார்க்கத் திரண்டு வந்து விட்டது. ''பாண்டின்னா என்ன கேம் யா(ர்)?'' என்று அப்பாவித்தனமாக சோனாலி கேட்டவுடன், கூடியிருந்த கிராமத்துப் பெண்கள் நமுட்டுச் சிரிப்பு சிரித்தார்கள். ''இந்த கேமோட ஆரிஜின் பாண்டிச்சேரி யாப்பா?'' என்று இன்னொரு மாடர்ன் பெண் கேட்டு, தன் பொது அறிவை வெளிப்படுத்தினார். பாண்டி ஆடுவது எப்படி என்று டெமான்ஸ்ட்ரேஷன் நடந்தது. அதனைத் தொடர்ந்து சென்னை இளைஞிகள் சில்லைத் தூக்கி எறிந்து, நொண்டி அடித்து, பாண்டி ஆடினார்கள். நெற்றியின் மேல் சில்லை வைத்துக்

# நெமிலிக்குப்பத்தில் அழகான

**“எ**ன்ன! கபடி எப்படி ஆடுறதுன்னு தெரியாதா?'' நக்கலாகக் கேட்டது ஒரு நெமிலிக்குப்பத்து அரை டவுசர். ''ரொம்ப சிம்பிள்!'' என்று கபடி பற்றி ஒரு மினி லெக்சர் கொடுத்தார் நெமிலிக்குப்பம் அன்பு. பத்தே நிமிடங்களில் அக்னீஸ் வரைக் கேப்டனாகக் கொண்ட சென்னை அணியும், அன்பு தலைமையிலான நெமிலிக்குப்பம் அணியும் தலா ஏழு ஆட்டக்காரர்களுடன் ரெடி. ''அன்பு சார்! நாங்க எல்லாம் ஆட்டத்துக்குப் புதுசு! கை, கால் ஒடஞ்சிடப்போகுது! கொஞ்சம் லைட்

கொண்டு கண்களை மூடியபடி, அண்ணாந்து பார்த்து, ''ரைட்டா?'' என்று அடியெடுத்து வைத்தபோது ஒரே கலாட்டா தான்.

**அ**து முடிந்ததும் அடுத்து கயிறு இழுக்கும் போட்டி. சென்னை அணி Vs



நெமிலிக்குப்பம் அணி. போட்டி ஆரம்பமாவதற்கு சில நிமிடங்கள் முன்னால், ஓடோடி வந்தார் நெமிலிக்குப்பத்தின் மிஸ்டர் உசிலைமணி. நெமிலிக்குப்பம் அணியினர் தங்கள் பக்கக் கயிற்றின் கடைசி பகுதியை அவரின் உடம்பில் இரண்டு சுற்று சுற்றியவுடன், அவர் சம்மணமிட்டு பீச் மணலில் உட்கார்ந்து விட்டார். அந்தக் கணமே, சென்னை இளைஞர்கள் மனம் சோர்ந்து போனார்கள். ஆனாலும் சென்னைப் பெண்கள் கொடுத்த உற்சாகத்தில் விசில் ஊதியவுடன் இழுக்கத் தொடங்கினார்கள். நெமிலிக்குப்பம் அணியினருக்கு வெற்றிக் கனி ஒரு ஜுஜுபி!

பிறகு நடந்த கடல் சாகசப் பயணமும் களை கட்டியது. ஒரு மோட்டார் படகுக்கு ஓர் ஆண், ஒரு பெண் என்று ஐந்து ஜோடிகள் கொண்ட குழு. உள்ளூர இருந்த பயத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல் தைரியமாய்ப் புறப்பட்டார்கள். அலைகளில் படகு அப்படியும் இப்படியுமாக ஆடியபோது அவர்கள் பயத்தில் எழுப்பிய கூக் குரல்கள் காற்றில் கரைந்தன. கரைக்குத் திரும்பிய வுடன் எல்லோரும் தவறாமல் சொன்னது: இந்த அனுபவம் ஆயுசுக்கும் மறக்காது.

# ராட்சஸிகள்!

**அ**து சரி! இந்த சென்னை இளவட்டங்கள் எதற்காக நெமிலிக்குப்பத்துக்கு வந்து இப்படிக் கொட்டமடித்தார்கள்? இவர்கள் அனைவரும் மிஸ் சென்னை, சென்னை இளைஞன் போட்டியின் இறுதிச் சுற்றுக்குத் தேர்வு செய்யப்பட்டவர்கள். சௌகரியமான நகர்ப்புற வாழ்க்கை யிலேயே பழகிவிட்ட இவர்களுக்கு கிராம வாழ்க்கை எப்படி இருக்கும் என்று கொஞ்சம் தொட்டுக் காட்ட, இந்தப் போட்டியை நடத்திய 'விபா'வின் வித்யாவும், ஷோபாவும் செய்த ஏற்பாடுதான் இது. சுனாமியின்போது, அதிர்ஷ்டவசமாக உயிர்ச் சேதமின்றி தப்பிய இந்த மீனவ கிராமம் மகாபலிபுரம் அருகில் உள்ளது.

சென்னையில் நடந்த இறுதிப் போட்டியில் நடிகை மீனா, சம்யுக்தாவுக்கு மிஸ் சென்னை கிரீடம் சூட்ட, ஆண்களில் வெற்றி பெற்றவர் அமித் நஹர்.

**- கௌதம்ராம்**



# 4 ஜகஜ்ஜால ஜோடி

## சீக்ரெட் ஆஃப் சிறுநீரகம்



பி.ஜே.பி.யின் புண்ணியத்தில் பட்டிவீரன்பட்டி வரை பிரபலமாகிவிட்ட போக்ரானைக் கேட்டால் ராஜஸ்தானில் இருக்கிறது என்பீர்கள். ஜிப்ரான் தெரியுமா என்றால், உருது இலக்கியத்தின் பிதாமகன் என்று உரக்கச் சொல்வீர்கள். மாறாக, நெப்ரானைப் பற்றிக் கேட்டால் உங்களில் எத்தனை பேருக்குத் தெரியும்? நெப்ரான்கள் எங்களின் வடிகட்டும் தொழில்நுட்பத்துக்கு அப்பன்கள். ஒரு அப்பனோ, இரு அப்பனோ அல்லர். எங்களின் உள்ளே ஒரு மில்லியன் நெப்ரான் அப்பன்கள்.

கர்ணனுக்குக் கவச குண்டலம் போல ஒவ்வொரு நெப்ரானுக்கும் ஒரு சூப்பர் குண்டல அமைப்பு உண்டு. அதன் பெயர் கிளாமருலஸ். இது வள்ளல் அல்ல, வடிகட்டி. நெப்ரானின் நுழைவாயில் என்றுகூடச் சொல்லலாம். கிளாமருலஸ் இரத்தத்தை வடிகட்டும் வித்தையை நீங்கள் நேரில் பார்க்கும்போது, 'கிளாமருலஸ் காலடி இரத்த மெடுத்து நெத்தியில பொட்டு வெச்சோம்' என்று இளையராஜா மெட்டில் பாடினாலும் பாடுவீர்கள். இந்த இரண்டு வி.ஐ.பி.களையும் மிக அருகில் சந்தித்துக் கைகுலுக்க இன்னும் கொஞ்ச தூரம் பயணித்தால் போதும். அதற்கு முன்பு உப்பு மிதவையில் உட்கார்ந்தபடி நீங்கள் பயணிக்கிற இரத்தத்தில் என்னவெல்லாம் இருக்கிறதென்று தெரிந்துகொண்டால் தப்பில்லை.

முழுமையாக வளர்ச்சியடைந்த மனித உடலில் சராசரியாக ஐந்து லிட்டர் இரத்தத்துக்கு உத்தரவாதம் தரலாம். இன்னும் துல்லியமாகச் சொல்ல வேண்டுமானால், நீங்கள் உடல் பருமன் இல்லாத, ஆரோக்கிய ஆண்மகன் என்றால், உங்களது ஒவ்வொரு கிலோ எடைக்கும் எழுபத்தைந்து மிலி இரத்தம் இருக்கும். அதுவே நீங்கள் ஐம்பது கிலோ தாஜ்மஹால் பெண்மணி என்றால் ஒரு கிலோவுக்கு அறுபத்தேழு மிலி இரத்தம் இருக்கும். இப்போது உங்கள் எடையை வைத்து உடலில் வலம் வரும் மொத்த இரத்தத்தின் அளவைக் கணக்கிட்டுக் கொள்ளுங்கள். உடல் பருமன் உள்ளவர்களுக்கு மொத்த இரத்த அளவானது 5 முதல் 7 சதவிகிதம் குறைவாகவே இருக்கும்.

மொத்த இரத்த அளவில் சிவப்பு மற்றும் வெள்ளை இரத்த அணுக்களின் இராஜ்ஜியம் 45 சதவிகிதம். மீதமுள்ள 55 சதவிகித திரவப் பகுதியின் பெயர் இரத்த பிளாஸ்மா. இந்த

# 150 கிராம்

# டாக்டர் பி.ரவிச்சந்திரன்

வைக்கோல் நிற திரவத்தில் தண்ணீர் அளவு 90 சதவிகிதம். மற்றபடி குளுகோஸ் (சர்க்கரை), நியூட்ரியன்ட்ஸ் எனப்படும் தாதுச் சத்துக்கள், உப்புக்கள் - முக்கியமாக சோடியம் எனப்படும் உப்பு, பொட்டாசியம், கால்சியம் குளோரைடு, பிறகு புரோட்டீன் எனப்படும் புரதங்கள் - அதாவது அல்புமின் மற்றும் பலவகைப்பட்ட 'குளோபுலின்கள்' இதில் அடக்கம். இம்யூனோ குளோபுலின்கள் ரொம்பவும் முக்கியமான புரத வகை. நமது உடலில் நோய் எதிர்ப்புச் சக்தி எனும் AK47 துப்பாக்கியைத் தாங்கியபடி இரத்தத்தில் சதா பேட்ரோல் வந்து கண்காணிக்கும் இராணுவ வீரர்கள். அத்து மீறி உள்ளே ஊடுருவும் கிருமிகளை ஒரு கை பார்க்கும் பருத்தி வீரன்கள். இந்த இரத்த பந்துக்களின் பட்டியலில் அடுத்து வருபவை, பில்ருபின் எனப்படும் பித்தப் பொருட்களும், உடலில் மாயாஜாலங்களை நிகழ்த்திக் காட்டும் ஹார்மோன்களும்.

இவை எல்லாவற்றையும் விட இரத்தத்தின் மிக முக்கியமான வரமென்றால் அவை பிளேட்லெட் அணுக்கள். எங்கேயாவது இரத்தக்கசிவு ஏற்பட்டால் ஓடோடி வந்து இரத்தம் உறைவதற்கு உதவும் அணுக்கள். பிளேட்லெட் மட்டும் இல்லையென்றால், ஒரு சின்ன காயம் ஏற்பட்டாலும் இரத்தம் வடிந்தே நீங்கள் உயிரை விட வேண்டி இருக்கும். 'பிளேட்லெட் அணுக்கள்தான் இருக்கின்றனவே... அப்புறம் எதற்கு ஹெல்மெட்?' என்று வாங்கிய ஹெல்மெட்டை வீட்டில் வைத்து அழகு பார்த்தால் உங்களைப்போல பரிதாபத்துக்குரிய மனிதர் யாருமில்லை. விபத்தில் பலத்த காயம்பட்டு, பல வழிகளில் இரத்தம் வேகமாக வெளியேறும்போது பிளேட்லெட் அணுக்களும் வெளியேற வேண்டிய நிலை வரும். இப்படிப்பட்ட ஆபத்தான சமயங்களில் பிளேட்லெட் உங்களைக் கைவிட்டாலும் நாங்கள் காப்போம். எங்கள் உள்ளே உற்பத்தியாகும் 'ரெனின்' என்ற ஹார்மோனை, அவசர கால அடிப்படையில் உற்பத்தி செய்து உங்கள் ஆருயிரைக் காப்போம். குஜராத் மாநிலத்துக்குச் சுற்றுலா போனால் போர்பந்தர் வரை போய் காந்தி பிறந்த வீட்டை ஓர் எட்டுப் பார்க்காமல் வர



# அதிசயம்!

மாட்டீர்கள் இல்லையா? ரெனின் ஜென்ம பூமிக்கும் கட்டாயம் உங்களைக் கூட்டிப் போய்க் காட்டுவோம். அதுவரை கொஞ்சம் பொறுமையாகப் பயணத்தைத் தொடருங்கள்.

**எ**ங்களின் அயிலத்தில் நுழைந்த அகலமான ரீனல் ஆர்ட்டரி, அடுத்து செக்மென்டல் ஆர்ட்டரி எனப்படும் பல்வேறு கிளைத் தமனிகளாகப் பிரிந்து செல்லும். இப்போது நீங்களும் ஒரு கிளைத் தமனியின் வழியே முழுவேகத்தில் பாயும் இரத்தத்தில் பயணத்தைத் தொடர்கிறீர்கள். கிளைத் தமனிகள் ஒவ்வொன்றும் தடாலடியாக மேலும் பல கிளைத் தமனிகளாகப் பிரிந்து 'இன்டர்லோபுலர் ஆர்ட்டரி' என்ற பெயருடன், எங்களின் முதுகுப் பகுதியாகிய கார்ட்டெக்ஸை (Cortex) வந்து அடைந்த அடுத்த கணம், அதிரடியாக ஒரு மேஜிக். இன்டெர்லோபுலர் தமனி ஒவ்வொன்றும் அப்படியே 'டைவ்' அடித்து, பல்வேறு வளைவுத் தமனிகளாகத் தலைகீழாய் இறங்கும் அதிசயத்தை ஆர்க்குவேட் ஆர்ட்டரி என்பார்கள்.

ஆர்க்குவேட் ஆர்ட்டரி வளைவுகளின் அழகை உணர்த்த வேண்டுமானால், உங்களை தஞ்சையின் புகழ்பெற்ற மராட்டிய அரண்மனைக்கு அழைத்துச் செல்ல வேண்டும். அங்கே அரண்மனைக் கட்டடங்களில் நீங்கள் காணும் வளைவுகளைக் காட்டிலும் கச்சிதமான, கலைநயம் மிக்க வளைவுகள் எங்களின் ஆர்க்குவேட் ஆர்ட்டரிகள். இப்படியொரு ஜிலீர் வளைவுகளை இறைவன் எங்களுக்கு வழங்கியதற்கு, எங்களின் உள்ளே வரும் இரத்த அளவுதான் காரணம். வெறும் நூற்று ஐம்பது கிராம் எடை கொண்ட நாங்கள், ஒவ்வொரு நிமிடத்துக்கும் நூற்று இருபது மில்லி இரத்தத்தைச் சுத்தம் செய்தாக வேண்டும். அப்படியானால் இருபத்து நான்கு மணி நேரத்துக்கு எத்தனை லிட்டர் இரத்தத்தைச் சுத்திகரிக்க வேண்டும் என்பதை உங்கள் மன கால்குலேட்டரில் கூட்டிப் பாருங்கள். இவ்வளவு சிறிய உருவம், எவ்வளவு அதிக இரத்தத்தை உள்வாங்க வேண்டும்! அப்படியானால் எங்கள் உள்ளே இரத்தம் பாயும் வேகத்தில் தவறியும் தடை ஏற்படக் கூடாதல்லவா! அதனால்தான் இப்படியொரு பாராசூட் அமைப்பு முறை.

அடிவயிறு சில்லிடக் கீழிறங்கிய அனுபவத்தின் ஆச்சர்யம் விலகுவதற்கு முன்பு, உங்கள் எதிரில் ஓர் உருண்டை. இந்த உருண்டைக்குள் நீங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் 'அப்பரண்ட் ஆர்ட்டரி' எனும் உள் நுழையும் தமனி வழியாக உள்ளே போய்த்தான் ஆக வேண்டும். உள்ளே உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறாள் ஒரு கிளாமர் தேவதை. நீங்கள் எப்படியும் வருவீர்கள் என்று இவ்வளவு காலம் காத்துக் கொண்டிருந்த அந்தத் தேவதை...!?

(பயணம் தொடரும்)



**நி**ன்றேவிட்டது என்றே பலரும் நினைத்த விக்ரமின் 'பீமா' ஆடியோ கேஸட் ரிலீஸ் அண்மையில் நிகழ்ந்தது. "எல்லாத்தையும் முறியடிக்க படம் ரெடி. தாமரை எழுதின கடைசி பாட்டுக்கு செட் போட்டு பிறகு அதை மாத்த வேண்டியதா போச்சு. இதுக்கு மட்டும் தனியா ரெண்டு லட்சம் எக்ஸ்ட்ரா செலவு. ஆனா தயாரிப்பாளர் ரத்னம் சார் எதுவுமே சொல்லல. இந்த உணர்வுதான் பீமாவை இன்னைக்குக் கரை சேர்த்திருக்கு!" என்றார் இயக்குநர் லிங்குசாமி.

- ஜீவா

நலமிக்க வாழ்க்கை முறை, சி.வே.ராதா கிருஷ்ண சாஸ்திரி, வெளியீடு: அகஸ்தியர் பதிப்பகம், தெப்பக்குளம், திருச்சி - 620 002. விலை ரூ.95.00

# பற்குச்சிக்குத் தடா!




● சிராத்த தினம், அமாவாசை முதலிய நாட்களில் பற்குச்சிகளைப் பயன்படுத்தாதே என்கிறது தர்மசாஸ்திரம். அந்நாட்களில் இரத்தக் கசிவு ஏற்படுத்தக்கூடிய செயலைத் தவிர்க்க வேண்டும். கவனக்குறைவால் ஈகிறுகளில் சேதம் ஏற்பட்டு இரத்தக் கசிவு நேரலாம் என்பதால் இந்தத் தடை.

● சிறுநீர் கழித்ததும் நான்கு தடவைகளும் மலம் கழித்ததும் எட்டுத் தடவைகளும் உணவு உண்டபின் பன்னிரண்டு தடவைகளும் பல்விளக்கிய பிறகு பதினாறு தடவைகளும் வாய் கொப்புளிப்பது அவசியம்.

● காலை வேளைகளில் அதுவும் பற்களைத் துலக்கியதும் வெற்றிலை போடுவதால் வாய், தொண்டை, மூக்கு முதலிய உறுப்புகளில் சுறுசுறுப்பு அதிகமாகி கபப்பூச்சு முதலியவற்றால் உட்பகுதிகளில் ஏற்படும் அடைப்பு நீங்க உதவும்.

● வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு மூன்றும் தக்க அளவில் சேர்ந்தால் அதை வீடா என்பர் (வீடிகா என்பது சம்ஸ்கிருதச் சொல்). வடநாட்டு வழக்கில் 'பீடா' ஆனது.

● வெந்நீரால் கழுத்துக்குக் கீழே ஸ்நானம் செய்வது பலம் தரும். வெந்நீரைத் தலையில் ஊற்றிக் கொள்வது கண்களுக்கும் கேசத்துக்கும் இதமல்ல.

● அசுத்தம் கலவாத தூய மண்ணைக் காய வைத்துச் சலித்து வைத்து உடம்பில் பூசிக் குளிப்பது 'மிருத்திகா ஸ்நானம்' (மண் பூசிக் குளித்தல்) எனப்படும். வசப்படாத பல எளிய நோய்களைப் போக்கும் குளியல் முறை இது.

- இதுபோல் அருமையான ஆயுர்வேதக் குறிப்புகள் அடங்கியுள்ள கட்டுரைகளின் தொகுப்பு இந்த நூல்.

- சௌபர்ணிகா

புக் பேங்க்



# கல்

'டொம்... டொம்...' என்று காதைப் பிளக்கும் வெடிச் சத்தம் கேட்டது. நிலநடுக்கம் வந்ததுபோல் வீடுகள் இலேசாக ஆடின. சுவரில் வெடிப்பு விழுந்த இடத்திலிருந்து மண் கொட்டியது. தட்டோடுக்கு குறுக்கும் நெடுக்குமாக மேலும் இரண்டு பனை மரக் கட்டைகள் தாக்கான் கொடுத்திருந்தாலும் வீட்டின் மேல் நம்பிக்கை இல்லை இராமாயிக்கு.

பிள்ளைகள் சாப்பிட்டுக் கொண்டிருந்த பழைய சோற்றில் புழுதி விழுந்தது. எப்போதும் நடப்பதுதான் என்பதால் அதைப் பிள்ளைகள் பெரிதாக எடுத்துக் கொள்ளாமல் பசியால் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். திடீரென தட்டோடு விழுந்துவிட்டால் என்ன செய்வதென்ற பயம்தான் இராமாயிக்கு மேலிட்டது. படக்கென மூன்று பிள்ளைகளையும் பிடித்திழுத்து வீதிக்கு வந்தாள்.

ஏற்கெனவே பல வீட்டுக்காரர்கள் வெளியில்தான் உட்கார்ந்திருந்தார்கள். வீடு என்பது பெயருக்குத்தான் எல்லோருக்கும். மற்றபடி குளிப்பது, துவைப்பது, சமைப்பது, தின்பது, படுப்பது, கெட்டு ஒட்டுவது எல்லாமே வீதியில் வைத்துத்தான். வீட்டைவிட உயிர் முக்கியமல்லவா?

''என்ன ராமாயக்கா... தைரியமா உள்ளார புள்ள குட்டியோட இருந்தீங்க?''- பக்கத்து வீட்டுக்காரி நக்கலாக இழுத்தாள்.

''ஒருவாச் சோறு உள்ள வச்சி புள்ளைகளுக்குக் கொடுக்கலாம்னா முடியுதா? புழுதிச் சோத்துக்குத்தான வாக்கப்பட்டிருக்கோம்...''-அலுத்துப்போய் பேசிய இராமாயி, பிள்ளைகளை நோக்கி, ''போயி தெரணையில உட்கார்ந்து சாப்பிடுங்கடா'' என்று வேப்பமரத் திண்ணைக்கு அனுப்பினாள்.

அப்போது அந்த வழியாக வந்த எழுபது வயதுக் கிழவி, ''ஏம் புள்ள, எந்தப் பய வெடி போடுறான் காதைக் கிழிக்கறாப்ல தெனமும்?'' என்றாள்.

''கிரானைட் கல்லு எடுக்கிறாய்ங்க... அதான் வெடிச் சத்தம்.'' இராமாயிதான் பரிதாபப்பட்டு பதில் சொன்னாள்.

''கல்லு எடுக்க வெடி எதுக்குப் போடணும்?'' நாடியில் கை வைத்து ஆச்சரியத்துடன் கிழவி கேட்டாள்.

''பூமிக்கு அடியில இருக்குதாம். அதான் வெடி வைச்சி எடுக்குறாய்ங்க.''

''பூமிக்கு அடியிலயா? அப்ப அது அரசாங்கச் சொத்தாச்சே'' என பதிலுக்காக இராமாயியைப் பார்த்தாள் கிழவி.

''ஆமாமா. இவனுக கவர்மெண்டு கல்லத் திருடுறானுக. நீ போயி போலீசுல சொல்லு'' என்று பக்கத்து வீட்டுக்காரி சொன்னதும்,

''போடி போக்கத்தவளே.'' என்றபடி நகர்ந்தாள் கிழவி.

''என்னக்கா நீங்க? அதுக்குப் போயி பதில் சொல்லிக்கிட்டு. மறுபடியும் வெடிச் சத்தம் கேட்டோனே திரும்ப இதையே தான் கேட்கும்'' என்றாள் பக்கத்து வீட்டுக்காரி.

''வயசானது கேக்குதுல்ல. பதில் சொல்லலைனா நல்லாவா இருக்கும்?'' என்றபடியே வீட்டுக்குள் சென்ற முக்காலி, அட்டைக்கட்டு, பசை எல்லாவற்றையும் எடுத்து வந்தாள் இராமாயி.

வலது காலை மடித்து, இடது காலை நீட்டி முக்காலியை முன்னால் வைத்து உட்கார்ந்தாள். தீப்பெட்டி அட்டைக் கெட்டில் மாட்டியிருந்த ரப்பர் பேண்டை கழட்டினாள். ரெண்டு கைகளால் அட்டைக் கெட்டை வளைத்து நெளித்து படிக்கட்டுகள் போல அவற்றின் முனைகளை ஆக்கி முக்காலியில் வைத்தாள். ஆள்காட்டி

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை**

விரலில் பசையை எடுத்து அந்தப் படிக்கட்டு முனைப்பகுதியில் தடவினாள். இப்போது ஒவ்வொரு பெட்டியாக மடக்கி மடக்கி ஒட்டினாள். அவளது விரல்கள் இயந்திரம் போல இயங்கின.

''எக்கா, அந்த மூணாவது தெருவுல ஒரு காலேஜி வாத்தி இருந்தார்ல... ஸ்கூட்டர்லயே போவாரே... கழுத்த சாச்ச மாதிரி. நீங்க கூட பாத்திருப்பீங்க... கண்ணாடி போட்டவரு...''

''ஆங்... அவரா? கவர்மெண்டு ஸ்கூல் டீச்சர் வீட்டுக்காரரு...''

''அவரேதான்... அவரு வீட்ட வித்துட்டு காலேசிகிட்டையே வீடு வாங்கிப் போயிட்டாரு. வெவரம் தெரியாம வாங்கிட்டு, வந்ததுக்கு அப்புறம்தான் டொம்மு டொம்முன்னு தெனமும் தீபாவளின்னு புரிஞ்சிருக்கும். நம்ம வீடுகள்லாம் அந்தக் காலத்து கல் கட்டடம். ஏதோ தாங்குது. அவரு வீடு அப்படியா? விரிசல் விழ ஆரம்பிச்சிருச்சி. புழுதிச் சோறு தங்க முடியாம ஓடிட்டாரு.'' சிரித்தாள் பக்கத்து வீட்டுக்காரி.

''யாரு வாங்கினது தெரியுமா? கல் லெடுக்குற கம்பெனிக்காரங்கதான் வாங்கியிருக்காங்க'' என்றாள்.

''பேசாம நாமளும் வித்துட்டு வேற எங்கிட்டாவது போயிற வேண்டியதான்'' என்று இராமாயி யோசனை கூற,

''அதுதான் முடியாதக்கா.''

கெட்டு ஒட்டுவதை நிறுத்தி, ''ஏன்?'' என்றாள் இராமாயி.

''கம்பெனிக்காரங்க இன்ஜினீயரு வருவாராம். வீட்டுக்கு மதிப்புப் போடுவாராம். அதுல ஒரு லட்ச ரூபாய் கொறச்சிக் கொடுப்



பாங்களாம். நம்ம வீடுக ஒரு லட்சம்கூடப் போகாது.''

''அடப்பாவிகளா? இது அந்தக் கடவுளுக்கே அடுக்குமா?'' என்று வருத்தப்பட்டாள் இராமாயி.

''நீங்க வேறக்கா. கோயிலே ஆடிக்கிட்டு இருக்குங்கிறாங்க வெடிச் சத்தத்துல''

''இத அரசாங்கம்லாம் ஒண்ணும் கேக்காதா?''

கிரானைட் கல்லால் அரசுக்கு நல்ல



**இப்படிப்பட்ட ஜென்மங்க இருக்கிற வரைக்கும் புழுதிச் சோறுதான் திங்க முடியும்!**

வருமானம் கிடைப்பதால் அதை வளர்ச்சியுறச் செய்ய பல கோடிகள் அரசு ஒதுக்கி இருப்பது தெரியாததால் பக்கத்து வீட்டுக்காரிக்கு பதில் சொல்லத் தெரியவில்லை.

'இப்படி கிரானைட் கல் கிடைக்கும் ஊர் என்று ஆதியிலேயே தெரிந்துதான் திருக்கல்லூர் என்று இந்த ஊருக்குப் பெயர் வைத்தார்களா அல்லது இப்படிக் கல்லால் ஊரே அழிந்து விடும் என்று யூகித்து வைத்திருப்பார்களா?' தனக்குத் தானே எண்ணிக்கொண்டாள் இராமாயி. அவளது கைகள் ரோபோ போல் கெட்டுகளை ஒட்டித் தள்ளின.

அப்போது இராமாயி கணவன் முழு போதையில் சைக்கிளை தெற்குக்கும் வடக்குக்குமாக ஓட்டி வந்தான்.

''என்னங்க அச்சாபீசுக்குப் போகலையா?''

''என்னடி பெரிய நாப்பதுக்கு முப்பது வேலை. நாளைக்குப் போனா என்ன கழுத்தையா சீவிருவாய்ங்க?'' என்று சிகரெட்டை இழுத்தபடி இறங்கினான்.

''அப்பா... அப்பா...'' எனத் திண்ணையிலிருந்து பிள்ளைகள் ஓடி வந்தன.

சைக்கிளைச் சுவற்றில் சாற்றிவிட்டு கேரிபேக்கை எடுத்தான். பிள்ளைகளுக்கு ஆளுக்கொரு பேக் கொடுத்தான். வாங்கி வந்த பந்துகளையும் கொடுத்தான்.

''எனக்கு சிகப்பு கலர்''

''எனக்குப் பச்ச கலர்'' என்று கடைசி ரெண்டும் எடுத்துச் செல்ல, மிஞ்சியதை மூத்தவள் வைத்துக் கொண்டாள்.

மல்லிகைப் பூவையும் அல்வாவையும் இராமாயி கையில் கொடுத்தவன், நூறு ரூபாய்த் தாளை விசிறி ''கோழி அடிச்சிக் கொழம்பு வை'' என்றான்.

''ஏது இம்புட்டு பணம்? ஒரே தடபுடலா இருக்கு'' என்று முறைத்தாள் இராமாயி.

''காலையில திங்கறப்ப சொத்துன்னு சோத்துல மண்ணு விழுந்ததுல... அதான் நேரா குவாரிக்குச் சண்டை போடப் போனேன். மொதலாளியே இருந்தாரு. டக்குன்னு முந்நூறு ரூபா அள்ளிக் கொடுத்தாரு மவராசன்'' என்று சொன்னபடி சிகரெட்டை விட்டெறிந்து தள்ளாடித் தள்ளாடி வேப்ப மரத் திண்ணையில் குப்புறப்படுத்தான்.

'இப்படி ஜென்மங்க இருக்கிற வரைக்கும் புழுதிச் சோறுதான் திங்க முடியும்' மனத்துக்குள் நினைத்தாலும் இராமாயியால் வெளியில் சொல்ல முடியாது. சொல்லிவிட்டு யார் அடி வாங்குவது?

'பெருசு பெருசாப் படிச்சவங்களே பயந்து போயி ஓடுறாங்க. இவரால் என்ன செய்ய முடியும்? அடிக்காம விட்டாங்களே...' என்று மனத்தின் இன்னொரு பகுதி வரிந்து கட்டியது கணவனுக்காக.

'எது எப்படியோ... புழுதிச் சோறை விலக்க நினைத்து கிடைத்த வரை போதும் என கம்பெனிக்காரர்களுக்கு வீட்டை

விற்று வேறிடம் சென்றாலும் இதுபோல கெட்டு ஒட்டியாவது குடும்பத்தைக் காப்பாற்ற முடியுமா? பொழப்புக்கே வழியில்லாமல் போய்விடுமோ? நாலு எழுத்தா படிச்சிருக்கோம், எங்க போனாலும் பொழைக்கிறதுக்கு? கெட்டு ஒட்டுறதைத் தவிர்த்து வேற என்ன தெரியும்? டவுனுக்குள் குடி போனால் வாடகைக்கே ஒட்டுறது சரியாப் போகும். அப்புறம் வயித்துக்கு மண்ணைத்தான் திங்கணும். அதுக்கு இந்தப் புழுதிச் சோறு தேவலை' - இராமாயிக்குச் சமாதானம் கூறியது மனசு.



வாழ்க்கையை நொந்தபடியே கெட்டு ஒட்டுவதில் கவனமானாள் இராமாயி. திடீரென வீட்டுக்குள் இருந்து "அம்மா..." எனக் கடைசி மகனின் அலறல் கேட்டது. பதறியடித்து ஓடினாள்.

கூரை ஓடு ஒன்று வீட்டுக்குள் பந்தை எடுக்க வந்த மகனின் தலையில் விழுந்து சிதறிக் கிடந்தது - அவளது வாழ்க்கையைப் போல.

தட்டோடைப் பார்த்தவாறே அழுது கொண்டிருந்தான். ஒட்டை வழியாகச் சூரியன் கள்ளனைக் கட்டான். பையன் தலையிலிருந்து இரத்தம் வழிந்தது. இராமாயிக்கு உயிர் வலித்தது.

"ஒண்ணுமில்லடா... ஒண்ணுமில்லைடா..." என்று வாரி அணைத்தாள்.

"பயம்மா இருக்குமா..." என்றுமிரண்டு அழுதான்.

பதறியவள், ஒரு கிழிந்த சேலையை எடுத்துக் கிழித்துத் தண்ணீரில் முக்கி அவன் தலையில் கட்டுப் போட்டாள்.

"ஆஸ்பத்திரிக்கப் போயி மருந்து போட்டா சரியாப் போய்டும்டா கண்ணு" என்று இடுப்பில் தூக்கிக்கொண்டு ஓடினாள்.

"ஊசி வேண்டாம்மா..." என்று முன்னைவிட அதிகமாகக் கத்தினான் நாலு வயதுக் குழந்தை.

"என்னம்மா ஆச்சி" என்றார் டாக்டர்.

"கல்லு விழுந்திருச்சிங்க" என்றாள் வாயைப் பொத்திக் கொண்டு. ●

## ராக்கெட் ராஜா

**டைனமைட் வாரியர்** - அமெரிக்கா, ஃப்ரான்ஸ் மற்றும் ஆசிய பகுதிகளில் வெளியாகி ஏறத்தாழ 350 கோடி ரூபாய் வசூல் சாதனை புரிந்த படம். தமிழில் 'ராக்கெட் ராஜா' என்கிற பெயரில் ஆகஸ்ட் இறுதியில் வெளியாகவிருக்கிறது. இப்படத்தின் ஹீரோ டான், இருபது வயது இளைஞன். குழந்தைப் பருவம் முதல் ஜிம்னாஸ்டிக், ஃபைட், கத்திச் சண்டையில் கடுமையான பயிற்சி பெற்று இந்தப் படத்துக்காக தன் முட்டியால் பாறாங்கற்களை உடைத்து பலமுறை மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு இறுதியில் நடிக்கத் தொடங்கி இருக்கிறார். சண்டைக் காட்சியின் போது ஆம்புலென்ஸ் தயாராக நிற்குமாம். டூப் அல்லது ரோபோ உபயோகிக்காமல் நூறு சதவிகிதம் நிஜமான ஃபைட் படமாக்கப்பட்டுள்ளது.

சண்டைக் காட்சிகளில் நம் ஊர் கையெறி குண்டுகளைப் போல ஹீரோ கையெறி ராக்கெட்டுகளை கொண்டு எதிரிகளை அழிக்கும் புதிய யுத்தியும் புகுத்தப்பட்டுள்ளதாம். ப்ரூஸ்லி, ஜாக்கிசான், ஜெட்லி, டோனிஜா வரிசையில் டானும் சாதனை படைப்பார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

- கீதா



# சிலிர்க்கும் சீனா!

பளபளப்பாக, மினுமினுப்பாக மாறிக் கொண்டிருக்கிறது பீய்ஜிங். தண்ணீர் குடிக்கும் டம்ளர், டீ ஷர்ட் காம்பவுண்ட் கேட், தலையின் பின்பக்கம், இடுப்புப் பிரதேசம், உள்ளங்கை, உச்சந்தலை எல்லா இடங்களிலும் நீக்கமற 2008 ஒலிம்பிக்ஸுக்கான விளம்பரம். 'எங்கள் நாட்டுக்குக் கிடைத்த மிகப்பெரிய கௌரவம் இது' என்று சீனர்கள் பார்ப்பவர்களிடம் எல்லாம் சிலாகித்துச் சிலிர்க்கிறார்கள்.

ஒலிம்பிக்ஸ் நடக்கிறது என்றால், அந்த நாட்டுக்கு லாரி முழுக்க லாட்டரி விழுந்திருக்கிறது என்று அர்த்தம். 'சீனா சீனா' என்று உலகமே முணுமுணுக்கும். உலகிலுள்ள அத்தனை மீடியாவும் அங்கே வந்து குவியும். சர்வதேசப் புகழ்; சர்வதேச ஒப்பந்தங்கள். இது போதாது?

'அய்யய்யே... உங்க ஊர் இப்படித்தான் இருக்குமா!' என்று வருபவர்கள் முகம் சுளிக்கக்கூடாது அல்லவா? குறிப்பாக, அமெரிக்கர்கள்(?). கொஞ்சம் முகம் கோணினாலும் போச்! அதனால் விழுந்து விழுந்து பீய்ஜிங்கை அலங்கரித்துக் கொண்டிருக்கிறார்கள். மணப்பெண்ணை சிங்காரிக்கும் லாகவத்துடன், பொறுப்புணர்வுடன், வாஞ்சையுடன்.

''யாரங்கே! பே என்று பல்லை இளிக்கும் கட்டடங்களைக் கீழே சாய்த்து விடு. குடிசை வாழ் பகுதிகளே, அருள் கூர்ந்து வேறு எங்காவது போய் விடுங்கள். வண்ணமயமான கேளிக்கைகளை எதிர்பார்த்து வந்து கொண்டிருக்கிறார்கள். வறுமையின் நிறம் சிவப்பா, பச்சையா என்று அவர்களுக்குத் தெரிய வேண்டியதில்லை. ஆகவே, ஒளிந்து கொள்ளுங்கள் கொஞ்ச காலத்துக்கு.'

மருதன்

08.08.08 அன்று 08.08 மணிக்கு 8 நொடிகள் முடியும்போது ஒலிம்பிக்ஸ் நிகழ்ச்சிகள் ஆரம்பமாகின்றன. சீனர்களுக்கு எட்டு ராசியான எண். அடுக்கடுக்காக இத்தனை எட்டுகளைப் பார்த்தபோது பலருக்கு உண்மையிலேயே சிலிர்த்துவிட்டது.

பீய்ஜிங்குக்கு ஒலிம்பிக்ஸ் லாட்டரி அடித்ததில் ஷாங்காய்க்கு ஏக மனவருத்தம். காரணம், ஷாங்காயும் பீய்ஜிங்கும் கிட்டத்தட்ட இந்தியா- பாகிஸ்தான் மாதிரி. அவ்ளோ அந்நியோன்யம்! வர்றேன் இரு என்று இரண்டு ஜஸ்டீஸ் கால் போட்டார்கள். ஹா! 2010ம் ஆண்டுக்கான World Expo லாட்டரி ஷாங்காய்க்கே!

எவர் உதவியையும் நாடாமல் சொந்தக் காலில் நின்ற சீனா, மக்கள் புரட்சியை நடத்திக் காட்டிய சீனா, உலக அரங்கில் பெருமிதத்துடன் நெடும் பயணம் மேற்கொண்ட சீனா, மாவோவின் சீனா, கம்யூனிஸ்டுகளின் சீனா.

எல்லாமே மாறிவிட்டது. அமெரிக்கா



வின் இன்னொரு மாநிலமாக மாறிவிடத் தயாரா என்று கேட்டால், யோசிக்காமல் தலையாட்டும் அளவுக்கு இன்று வளர்ச்சி யடைந்து நிற்கிறது. ஆனால், நிஜ சீனா சிறிதும் மாறவில்லை. இந்தக் கொண்டாட் டங்களிலிருந்து, அரசியல் எதிர்பார்ப்பு களிலிருந்து, மரத்தடி ஜோசியர்களிட மிருந்து நிறையவே விலகியிருக்கிறது நிஜ சீனா.

மிகச் சமீபத்தில் ஒரு செய்தி வெளி யானது. சீனப் பத்திரிகைகளின் கடைசி பக்கங்களில் சிறிதாகக் கட்டம் போட்டு, கறுப்பு வெள்ளைப் புகைப்படங் களுடன் வெளியிட்டிருந்தார் கள். ஆயிரத்துக்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் சீனாவின் செங்கற் சூளையிலிருந்து நிலக் கரிச் சுரங்கங்களிலிருந்து மீட்கப் பட்ட செய்திதான் அது.



உடலெல்லாம் தீக்காயங்கள். தள்ளாடி நடமாடியபடி வெளி யில் வந்திருக்கிறார்கள். பலர் இன்னமும்கூட அதிர்ச்சியிலிருந்து மீள வில்லை. மிருகத்தனத்தின் உச்சத்தை சந் தித்தவர்கள் அவர்கள்.

வேறு பிழைப்பு இல்லாத விவசாயி கள், சிறுவர்கள் சுரங்கத்தில் வேலை செய்ய வேண்டும். பணம் தருகிறோம் என்று அழைத்தவுடன் வீட்டில் சொல்லிக் கொண்டு ஓடி வந்து விட்டார்கள். மாதா மாதம் வீட்டுக்குப் பணம் அனுப்பலாம். கொஞ்ச காலம் பல்லைக் கடித்துக்கொண்டு பொறுத்திருந்தால் மீண்டுவிடலாம் என் பது அவர்கள் திட்டம்.



ஆனால், சுரங்க முதலாளிகள் அவர் களை டிராகுலா போல் உறிஞ்சத் தொடங் கினார்கள். ஒரு நாளைக்குப் பதினெட்டு மணி நேரங்கள் வேலை. ஐயோ முடிய வில்லை என்று அசந்து உட்கார்ந்தால் முதுகில் பிரம்படி, சாட்டையடி. பழுக்கக் காய்ச்சிய இரும்புத் துண்டால் சூடு போடுவதும் சர்வ சாதாரணம், சிறுவர்கள் என்றெல்லாம் பார்ப்பதில்லை.

உட்காராமல், கொள்ளாமல் ஓடியாடி வேலை செய்கிறார் களா என்பதை கண்காணிக்க வேட்டை நாய்கள். கொஞ்சம் அசந்தாலும் விழுந்து பிடுங்கி விடும். அதிகாரிகளிடம் அடி வாங்கியோ, நாயிடம் கடி வாங்கியோ ஒருவர் இறக்க நேரிட்டால் சுரங்கத்திலேயே அவர் புதைக்கப்படுவார். தவிரவும், எந்தவிதச் சாதனங்களும் இல்லா மல் சுரங்கத்தில் இறங்கி வேலை செய்ய வேண்டும். விஷ வாயுக்கள் தாக்கியோ, கால் தவறியோ விழுந்து தொலைத்தால் அவ்வளவுதான்.

நல்ல நேரத்தில் இப்போது எதற்கு அதெல்லாம், அவர்களைத்தான் மீட்டுவிட் டோமே என்று சீனாவால் சமாளிக்க முடி யாது. கிராமங்களில் மட்டுமல்ல நகரங் களிலும்கூட அடிமை முறை அப்படியே நீடிக்கிறது. பல்வேறு வேலைகளுக்காக சிறுவர்களைக் கடத்திச் செல்லும் வழக்கம் குறையவேயில்லை. இவர்களுக்கு போலீஸ் ஆதரவும் உண்டு. போலி கம்யூனிஸ்ட் அரசியல்வாதிகளின் ஆதரவும் உண்டு.

எல்லா முன்னேற்றத்துக்கும் ஒரு விலை உண்டு. சீனா தன் முன் னேற்றத்துக்கு கொடுத்த விலை மனிதர்கள். ○

# பாலாவிடமிருந்து பிரிந்து விட்டேனா?



'சேது'வில் தம்மை நிரூபித்தவர்கள் விக்ரமும் பாலாவும் மட்டுமல்ல... ஒளிப்பதிவாளர் ரத்னவேலும்தான். 'கள்ளம் கபடமற்ற ஒளிப்பதிவுக்குச் சொந்தக்காரர்' என்று மறைந்த ஒளிப்பதிவாளர் ஜீவாவிடம் வாழ்த்துரை வாங்கியவர் இவர். கௌதம் இயக்கி சூர்யா நடிக்கும் 'வாரணம் ஆயிரம்' மற்றும் காலிபட்டா (கன்னடம்) ஆகிய படங்களுக்கு இப்போது ஒளிப்பதிவு செய்து வருகிறார்.

**ஹிந்திக்குத் தாவாமல் தென்னிந்திய மொழிப் படங்களில் அதிக கவனம் செலுத்துவதேன்?**

''எனக்குத் திமிர் என்று நினைக்கிறேன். கதை எனக்குப் பிடிக்கவில்லை என்றால் அது எப்பேர்ப்பட்ட படமாக இருந்தாலும் ஒப்புக்கொள்ள மாட்டேன். தமிழில் நிறைய பெரிய நடிகர்களுடைய படங்களுக்கு ஒளிப்பதிவு செய்ய மறுத்திருக்கிறேன். இதனால்தான் என்னால் தொடர்ந்து பன்னிரண்டு சூப்பர் ஹிட் படங்களுக்கு ஒளிப்பதிவு செய்ய முடிந்தது. ஹிந்திப் படம் என்றால் ஒன்றரை வருடங்கள் வேறு படம் பண்ண முடியாது. ஹிந்தியில் ஒரு ஒளிப்பதிவாளருக்குக் கொடுக்கப்படும் சம்பளத்தை நான் தென்னிந்தியப் படங்களிலேயே வாங்கிக் கொள்கிறேன்.''

**'வாரணம் ஆயிரம்' பற்றி?**

''கௌதம் உதவி இயக்குநராகவும் நான் உதவி ஒளிப்பதிவாளராகவும் ராஜீவ்மேனனிடம் பணியாற்றியவர்கள். இருவரும் ஒன்று சேர வேண்டும் என்பது நீண்ட நாள் கனவு. 'காக்க காக்க' படத்துக்கு அவர் அழைத்தபோது என்னால் பண்ண முடியவில்லை. இப்போது எல்லாம் கைகூடியிருக்கிறது. 'வாரணம் ஆயிரம்' படத்தில் சூர்யா இரட்டை வேடத்தில் நடிக்கிறார். ஒரு வேடத்தில் வயதானவராக. நிறைய ஏரியல் ஷாட்டுகள் பயன்படுத்தி ஜாலம் காட்டி வருகிறேன். 40 சதவிகித படப்பிடிப்பு முடிந்துவிட்டது. செப்டம்பரில் அமெரிக்கா சென்று முழு படத்தையும் முடித்துவிட்டு வந்து விடுவோம்.''

**'சையனைடு' படத்தில் உங்களுடைய ஒளிப்பதிவு வெகுவாகப் பாராட்டப்பட்டது பற்றி?**

''ஆரம்பத்தில் இந்தப் படம் பண்ணத் தயங்கினேன் - கமர்ஷியலாக எடுத்துச் சொதப்பி விடுவார்களோ என்று. ஆனால் படத்தில் பாடல்கள், சண்டைக் காட்சிகள் இல்லை என்றவுடன் உடனே ஒப்புக் கொண்டேன். இருபத்தெட்டு நாள்களில் படத்தை முடித்தேன். சர்வதேசத் தரத்துக்கு ஒளிப்பதிவு இருப்பதாக ஷியாம் பெனகல், கிரிஷ் கர்னாட் போன்றோரும் பாராட்டுத் தெரிவித்திருக்கிறார்கள். எனக்கு தேசிய



# -ஒளிப்பதிவாளர் ரத்னவேலு

விருது கிடைக்க இந்த முறை பிரகாசமான வாய்ப்பு.''



**பாலாவிடமிருந்து பிரிந்துவிட்டீர்களா?**

''கிடையவே கிடையாது. பிதாமகன் நான் பண்ண வேண்டியது. முடியாமல் போய்விட்டது. 'இவர் பாலாவுடன் மட்டும்தான் படங்கள் செய்வார்' என்கிற ஒரு இமேஜ் என்மீது விழுந்ததால் நானும் மற்ற படங்கள் பண்ண ஆரம்பித்தேன். பாலா படங்கள்தான் எனக்குப் பெரிய திருப்புமுனை. நந்தாவில் நான் காதல் காட்சிகளில் வொய்ட் ஆங்கிள் ஷாட்ஸ் பயன்படுத்தியிருப்பேன். கேமராமேன் ஜீவா இந்தப் புதிய உத்தியை நெகிழ்ந்து பாராட்டினார். நந்தா பார்த்துவிட்டு 'எனக்குத் தமிழில் பிடித்த கேமராமேன் ரத்னவேல்' என்று அவர் சொன்னதை இப்போது நினைக்கும் போது மனது பாரமாகிறது.''

**சூர்யாவுடனான நட்பு பற்றி?**

''விஜய், விக்ரம், சூர்யா எல்லோரும் என் நண்பர்கள்தான். சமீபத்தில்கூட, ரத்னவேல், 'நாம் படம் செய்து நீண்ட நாளாகிவிட்டதே' என்ற விஜய் 'அழகிய தமிழ் மகன்' படத்துக்கு அழைத்தார். 'வாரணம் ஆயிரம்' ஒப்புக்கொண்டதால் மறுத்துவிட்டேன். சூர்யா என் சகோதரர்போல. 'நந்தா' படத்தில் பாலாவுடன் பேச அவர் அச்சப்பட்டபோது, நான் உதவினேன். அன்றிலிருந்து எனக்கு ஏதாவது என்றால் துடிதுடித்துப் போய்விடுவார். எனக்காக பேரழகன் படத்தின் ஷூட்டிங் ஆரம்பிப்பதை இரண்டு மாதங்கள் தள்ளி வைத்தவர் அவர்.''

**தொழில்நுட்ப மாற்றங்களை எவ்வாறு எதிர்கொள்கிறீர்கள்?**



''அமெரிக்கன் சினிமாட்டோகிராபர் என்கிற ஒரு அமெரிக்கப் பத்திரிகைதான் என்னுடைய பைபிள். கேமராக்கள் பற்றிய எல்லா லேட்டஸ்ட் தகவல்களும் அதில் இடம் பெறும். புகழ்பெற்ற கேமராமேன்களின் பேட்டிகளும் வெளிவரும். இந்தத் தொழிலில் தினமும் உங்களை அப்டேட் செய்யாவிட்டால் நீங்கள் பின் தங்கிவிடுவீர்கள். ஆனால், தமிழ் சினிமாவில் டெக்னாலஜியை சிலர் கன்னாபின்னாவென்று பயன்படுத்துகிறார்கள். கேமராவை ஷேக் செய்தால் அது வித்தை என்று நினைக்கிறார்கள். சேவிங் பிரைவேட் ரையான் படத்தில் போர்க் காட்சிகளில் குண்டு வெடிக்கும்போது கேமராவை ஷேக் செய்வார்கள். அந்த உத்தியில் காட்சியின் உக்கிரம் மேலும் வெளிப்படும். தொழில்நுட்பத்தை அதன் தேவைக்குப் பயன்படுத்தினால் மட்டுமே அழகு.''

**– சநகன்**



★ தாத்தாவுடன் பேரன்...

# குரோட்டன்ஸுக்கு ஒரு கும்பிடு!

"கடுமையான உழைப்பு, எழுத்தாளர்களுடன் நட்புறவு, தரம் இவைதான் தாத்தாவுடைய பதிப்புலக வெற்றிக்குக் காரணம். அதையேதான் நானும் கடைபிடிக்க விரும்புகிறேன்'' என்று கூறும் சரவணன், பதிப்புலகில் பொன்விழா கண்ட வானதி திருநாவுக்கரசின் பேரன். வானதி குடும்பத்தில் பதிப்புத் தொழிலில் ஈடுபட்டுள்ள மூன்றாவது தலைமுறையைச் சேர்ந்தவர் இவர். வானதி திருநாவுக்கரசுக்கு எண்பது வயது நிறைவடைந்திருக்கும் நிலையில் தாத்தா பற்றிக் கூறுகிறார் பேரன் :

''நானும் இன்றைக்குச் சொந்தமாக ஒரு பதிப்பகம் நடத்துகிறேன் என்றால் அதற்கு முக்கிய காரணம் அய்யாதான். பள்ளிக்கூடத்தில் படிக்கும் காலத்திலேயே, புத்தகங்களின் கையெழுத்துப் பிரதிகளை நான் படிக்க, அவர் புரூஃப் திருத்துவார். அப்படித்தான் புத்தகங்கள் மீது எனக்கு ஆர்வம் ஏற்பட்டது. பள்ளிப் படிப்பை முடித்தவுடன் என்னை வானதி பதிப்பகத்திலேயே வேலைக்குச் சேர்த்துக் கொண்டார். வருகிற வாடிக்கையாளர்களை கவனிப்பது, அச்சகத்துக்குச் சென்று வருவது, எழுத்தாளர்களின் வீடுகளுக்குச் சென்று வருவது, பார்சல் கட்டுவது, கணக்கு வழக்குகள் பார்ப்பது என்று பலதரப்பட்ட வேலைகளையும் நான் கற்றுக் கொண்டது வானதியில் தான். நான் சேர்ந்து இரண்டு வருடங்கள் கடந்ததும் 'இனி நீ தனியாக பதிப்பகம் நடத்தலாம்' என்று வாழ்த்தி, தானே தென்கச்சி சுவாமிநாதனிடம் பேசி, அவரது எழுத்துக்களை புத்தமாக வெளியிட அனுமதி வாங்கிக் கொடுத்தார். 'அன்னை புத்தகாலயம்' ஆரம்பிக்கப்பட்டது இப்படித்தான்.

சமூகத்துக்குத் தவறான கருத்துகள் சொல்லும் புத்தகங்களை, பணம் சம்பாதித்தால் போதும் என்ற வியாபார நோக்கத்துடன் ஒருபோதும் வெளியிடக் கூடாது. நமக்குத் திருப்தி இல்லாத விஷயத்தை வாசகர்களுக்குக் கொடுக்கக் கூடாது என்பதெல்லாம்தான் அய்யாவின் பாலிசி.

அந்தக் காலத்தில் அவருக்கு அபிராமபுரம் வீடு வாங்கக் கடன் கொடுத்தவர், கையோடு ஒரு குரோட்டன்ஸ் செடியையும் கொடுத்தாராம். தினமும் காலை துளசி மாடத்தைக் கும்பிடும்போது, அந்தக் குரோட்டன்ஸ் செடி(மரம்)யையும் தொட்டுக் கும்பிடுவார்.

வானதி பதிப்பக அலுவலகத்துக்கு வந்ததும் காஞ்சிப் பெரியவர்கள் தொடங்கி வாரியார், கல்கி, சாண்டில்யன், கண்ணதாசன் வரை அனைவரது படங்களுக்கும் பூ வைத்து வணங்கிவிட்டுத்தான் தன் நாற்காலியில் அமருவார். இந்த வயதிலும் பதிப்பகக் கணக்கு வழக்குகளைத் தானே பார்ப்பார். அவரிடம் கற்றுக்கொள்ள வேண்டியவை இன்னும் எவ்வளவோ இருக்கின்றன.''

படம் : பொள்ளாச்சி சுந்தரம்

# சி.ஐ.டி. விஷ்வா துப்பறியும் இறந்தவனைத் தேடு! 4

கதை : படுதலம் சுகுமாரன்

படம் : ஜெயராஜ்

கமிஷ்னர் அறை...

இந்த ரிப்போர்ட்டைப் பாருங்க. அந்தக் கத்தியில் கொலைகாரன் கைரேகை இல்லை...

விபத்தில் இறந்தவன் கையில் கையுறை இல்லையே...!

கையுறை போட்டிருப்பானோ...?

சம்பவம் நடந்த தேதிக்கு முன்னும் பின்னும்...

காணாமல் போனவர்கள் பட்டியல் இது... நாட்டிலுள்ள எந்தக் காவல் நிலையத்திலும் அப்படி ஒரு கேஸ் பதிவாகவில்லை...

...அதாவது மூர்த்தியோட அங்க அடையாளங்களோடு ஒத்துப் போகிற மாதிரி...

ஸ்டேஷனில் பதிவாகாத கேஸ்களும் இருக்குமில்லையா...?

எல்லாப் புகார்களுமே போலீஸை எட்டுவதில்லையே...!

என்ன பண்ணலாம்?

பத்திரிகையில் விளம்பரம் கொடுத்துப் பார்க்கலாம்!

அதே சமயம் சென்னைப் புறநகர்ப் பகுதியின் ஒரு புது வீட்டில்... மூர்த்தி, அவன் மனைவி பார்வதி, தர்மா மூவரும்...

போலீசுக்கு நீ உயிரோடுதான் இருக்கே என்கிற சந்தேகம் வந்துட்டுது...

எப்படி?

வேணுவின் தம்பி வெளிநாட்டிலிருந்து வந்திருக்கான். அவன் தூண்டுதலாய் இருக்கும்.


அவனுக்குச் சந்தேகம் வரக் காரணம்?


அந்த ஆராய்ச்சி இப்போ அவசியமில்லை. தப்பிக்க வழி பாரு!
ஆந்திராவுக்குப் போயிடவா?
எல்லா திசையிலும் போலீஸ் 'செக்' வச்சிருக்கும்...
ஒரு வாரத்துக்குள் கையெறி குண்டுகளை அந்த பார்ட்டியிடம் கொண்டு சேர்க்கணும்...
அதை நான் பார்த்துக்கறேன்...


தர்மா ஜன்னல் கதவுகளைச் சாத்தினான்.
போலீஸ் நிழல்லயே ஒளிவதுதான் புத்திசாலித்தனம்.
இதே வீட்டில் இருங்க. ஆனா பேசக் கூடாது...மூச்!


அடுத்து, பின்கதவு.
உள்ளே ஆள் இருக்கும் சுவடே தெரியக்கூடாது- சரியா?


நான் வெளியே பூட்டி 'டு-லெட்' போர்டு மாட்டிட்டு வந்துட்டேன்.
உங்களுக்கு வேண்டியதைப் பின் பக்கமாக வந்து ரகசியமாய்த் தருவேன்.


போன் வயர், மின்சார வயர் எல்லாம் 'கட்' பண்ணிட்டேன். வேறு வழியில்லை!
ஃபேன்கூட ஓடாது!


போலீசை திசை திருப்ப இதுதான் ஒரே வழி.


அவன் சென்றதும் அந்த வீடே
இருளில் மூழ்கியது.


அப்போது செங்கல்பட்டை அடுத்த ஒரு கிராமத்து டீக்கடை பக்கத்தில் ஒரு ஆள்...
6 மாதம் முன்பு காணா
மல் போன 40 வயது
மதிக்கத்தக்க நபர்
கண்டுபிடிக்கப்
படாமலிருந்தால்
உடன் தொடர்பு
கொள்ளவும்.


இந்த விளம்பரம் பெரியவர் முனுசாமிக்குப் பயன்படும்!


பெரியவரிடம் செய்தியைச் சொல்லி-
உடனே சென்னை போய் அதிகாரிகளைப் பாருப்பா...
(தொடரும்)



'வேறே யாருக்கோதான் உன் அனுக்ரஹம் தேவைப்பட்டது; அதற்காகப் ப்ரார்த்தித்துக் கொண்டேன்; எனக்கு உன்னிடமிருந்து ஒன்றும் தேவையில்லை' என்கிற மாதிரி இருந்துவிட்டால் அது மரியாதைக் குறைச்சல். அதனாலே 'நாம் சின்னவன் மாதிரி இருந்து மஹாலக்ஷ்மியிடம் நமக்காகவும் ஏதாவது கேட்டுக் கொள்ள வேண்டும்' என்று தோன்றிற்று. ஆனால் அவருக்கு எந்த ஆசையும், எந்தத் தேவையும் வாஸ்தவத்தில் இல்லாததால் என்ன கேட்பது என்று தெரியவில்லை. அவளையே நமஸ்காரம் பண்ணி அதைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்று நினைத்து

# மனஸின் நிறைவு!

நமஸ்காரம்தான் நமக்கு மஹா பெரிய செல்வம். ஆசார்யாள் அப்படித்தான் சொல்லியிருக்கிறார்.

அவர் பால ப்ரம்மசாரியாக இருந்த காலத்தில் ஒரு ஏழை ப்ராமண ஸ்த்ரீக்கு இரங்கி லக்ஷ்மியிடம் ப்ரார்த்தித்துக் கொண்டு 'கனகதாரா ஸ்தவம்' பாடின கதை தெரிந்திருக்கலாம்.

அவர் ப்ரார்த்தித்துக் கொண்டவுடன் லக்ஷ்மி வந்து கனக வர்ஷமாகப் பொழிந்து விட்டாள். அது ஏழை ப்ராமணக் குடும்பத்துக்காக. ஆசார்யாள் அதில் ஒரு குன்றிமணிகூட எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால் லக்ஷ்மிக்கு த்ருப்தியாக இருக்குமா... அவர் கேட்டுக் கொண்டாரே என்று வேறே யாருக்கோ வாரி வழங்கிவிட்டு, இத்தனை அழகான ஸ்துதி பண்ணின அவதாரக் குழந்தைக்கு எதுவும் கொடுக்காமல் போவதற்கு? ஆசார்யாளுக்கும், நமஸ்கரித்தார். உடனேயே, 'அவளிடம் வேறென்ன செல்வத்தைக் கேட்க வேண்டும்? இப்படி நாம் சின்னவராக நின்றுகொண்டு ஒருத்தரிடம் ப்ரியத்தோடு, அடக்கத்தோடு, நன்றியோடு நமஸ்காரம் செய்யும்போது மனஸுக்கு எவ்வளவு நிறைவாக இருக்கிறது? அதனால் இந்த நமஸ்காரமேதான் பெரிய செல்வம். இந்த நமஸ்காரச் செல்வத்தை எனக்குக் கொடு என்றே ப்ரார்த்தித்துக் கேட்டு வாங்கிக் கொள்வோம்' என்று தோன்றிற்று. அதையே ச்லோகமாகப் பாடி விட்டார்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

அருள்வாக்கு

## கனவின் நுழைவாயில் - 4

**கல்கி 22.7.2007 இதழில் அறிவித்த 'பார்த்திபன்களே வாங்க! வாங்க!' போட்டிக்கு வந்த கனவுகளில் பரிசுக்குத் தேர்வானவை:**

# பார்த்திபன்களே வாங்க! வாங்க!

**பா**ர்த்திபன் கனவு நாவலை என் தமிழாசிரியர் சொல்லக்கேட்டிருக்கிறேன். எனது கனவு இதுதான்: விவசாய நிலங் களிலெல்லாம் இன்று கான்கிரீட் விதைக் கப்பட்டு கட்டடங்கள் வளர்ந்துள்ளன. மிச்சமுள்ள விளை நிலங்களாவது காக்கப் பட வேண்டும். அதற்கு நல்ல மழை வளம் வேண்டும். அதற்கான விழிப்புணர்ச்சியை மக்களிடம் ஏற்படுத்த ஒரு குழுவாக இணைந்து மரங்களை நடுவதை ஒரு பெரிய இயக்கமாக்க வேண்டுமென நினைக்கிறேன். அதற்கான முயற்சிகளைச் செய்வேன்.

**- பி.பார்த்திபன், மதுக்கூர்**

**எ**னது ஆறாம் வகுப்புக் கனவு, டாக்டராகி என் சொந்த ஊரில்





மருத்துவமனையைக் கட்டி, ஏழை களுக்கு இலவச சேவை செய்வது. அது என்னால் முடியவில்லை. அதனை என் குழந்தைகள் மூல மாகவோ அல்லது இரு அனாதைக் குழந் தைகளை தத்தெடுத்து அவர்களை டாக் டராக்கி அதன் மூலமாகவோ நிறை

இப்போட்டியில் கலந்து கொண்டவர்களில் பலர் மாணவர்கள். எதிர்காலத் தலைமுறையின் கனவும், சிந்தனையும் வீரியமிக்க சமுதாய நோக்குடன் இருப்பது மகிழ்ச்சியைத் தருகிறது. இவர்களது கனவுகள் நிச்சயம் நிறைவேறும்!

வேற்ற வேண்டுமென இருக்கிறேன். மேலும் வாழ்நாளில் ஒருமுறையாவது பெற்றவர்களை விமானத்தில் அழைத்துச் செல்ல வேண்டுமென்பது எனது நீண்ட நாளைய கனவு!

– இரா.பார்த்திபன்,
செய்யார்





* ஆர்.பார்த்திபன்

**எ**ல்லா துறைகளிலும் வல்லவர்களாக இருக்குமளவுக்கு இன்றைய இளைய சமுதாயத்தினர் தனி மனித ஒழுக்கத்தில் நல்லவர்களாக இருப்பதில்லை. காரணம் இயந்திரமான ஓட்டம், பணத்தை மட்டுமே குறி வைத்துப் பயணம். இதனால் ஒழுக்கம், அமைதி, உற்சாகம், ஆரோக்கியம், கட்டுப்பாடு போன்றவற்றுக்குத் தட்டுப்பாடு உண்டாகி இயந்திரமாகி வருகிறார்கள். நமது முன்னோர்கள் கொடுத்துச் சென்ற தியானம், யோகா போன்றவற்றால்தான் இவற்றைச் சரிசெய்ய முடியும். அதற்காக மாணவப் பருவத்திலேயே அனைவருக்கும் தியானம், யோகா வகுப்புகளை நடத்த வேண்டும். என்னால் முடிந்தவரை உற்சாகமான மனிதர்களைச் சமுதாயத்தில் உலா விட வேண்டுமென்பதே எனது கனவு!

– ஆர்.பார்த்திபன்,
நாகர்கோயில்

**வாசகர்களே தயாராக இருங்க,
அடுத்த இதழில் பரிசுப் போட்டி வரப் போகிறது!**



* பி.பார்த்திபன்



## 7. அருள்மொழி தேவி

# அமரர் கல்கி

# பார்த்திபன் கனவு



பொன்னனும் வள்ளியும் உறையூர்க் கோட்டை வாசலுக்கு வந்த அதேசமயத்தில், ராணி அருள்மொழி தேவி அரண்மனை உத்தியான வனத்துக்குள் பிரவேசித்தாள். பல்லவத் தூதருக்கு மகாராஜா கூறிய பதிலை ஏவலாளர்கள் உடனே வந்து மகாராணிக்குத் தெரிவித்தார்கள். மன்னர் வரும் வரையில் பொழுதுபோக்குவதற்காக, ராணி உத்தியான வனத்துக்குள் சென்றாள். அவ் வனத்தில் செண்பக மலர்கள் அடர்ந்து வளர்ந்திருந்த ஒரு மூலைக்குப் போய், அங்கே அமைத்திருந்த பளிங்குக் கல் மேடையில் உட்கார்ந்துகொண்டாள்.

அங்கிருந்து பார்த்தபோது மேற்கு திசையில் சூரியன் அஸ்தமனமாகிக் கொண்டிருந்த காட்சி, அடி மரங்களின் வழியாகத் தெரிந்தது. மேல் வானம் முழுவதும் பத்தரை மாற்றுத் தங்க விதானத்தைப் போல் தகதகவென்று பிரகாசித்தது. பார்த்துக்கொண்டிருக்கும் போதே தங்க நிறத்தின் சோபை மங்கிக்கொண்டு வந்தது; அடிவானத்தில் சூரியன் மறைந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் மேல்வானம் முழுவதும் ஒரே இரத்தச் சிவப்பாய் மாறிற்று. இந்தக் காட்சி அருள்மொழி தேவிக்கு ரணகளத்தையும் அங்கே இரத்த ஆறு பெருக்கெடுத்து ஓடுவதையும் ஞாபகப்படுத்திற்று. தேவி நடுநடுங்கிக் கண்ணை மூடிக்கொண்டாள்.

மறுபடி அவள் கண்ணைத் திறந்து பார்த்தபோது, வெள்ளி நிலவின் இன்பக் கிரணங்கள் மரக் கிளைகளின் வழியாக எட்டிப் பார்க்கத் தொடங்கியிருந்தன. ராணி உள்ளத்தில் பழைய ஞாபகங்கள் குமுறிக் கொண்டு வந்தன. பன்னிரண்டு வருஷத்துக்கு முன்னால் பார்த்திப மன்னனுக்கு மாலையிட்டு, இந்த அரண்மனைக்கு அவள் வந்தாள். அந்த நாளிலிருந்து இம்மாதிரி வெண்ணிலவு பிரகாசித்த எத்தனையோ இரவுகளில் அவளும் பார்த்திபனும் இந்த உத்தியான வனத்தில் கைகோத்துக் கொண்டு உலாவியதுண்டு. இந்தப் பளிங்குக் கல் மேடை மீது உட்கார்ந்து, இருவரும் நேரம் போவதே தெரியாமல் இருந்ததுண்டு. அந்த நாளில் பார்த்திபன் சில சமயம் புல்லாங்குழல் கொண்டு வந்து இசைப்பான். அருள்மொழி மெய்மறந்து கேட்டுக் கொண்டிருப்பாள். கண்ண பெருமானே பார்த்திபனாக உருக்கொண்டு வந்து மணம் புரிந்ததாக எண்ணிப் பூரிப்படைவாள். இப்படி சில காலம் வாழ்க்கையே ஓர் இன்பக் கனவாகச் சென்று கொண்டிருந்தது.

பிறகு விக்கிரமன் பிறந்தபோது, இன்ப வாழ்க்கையின் சிகரத்தை அவர்கள் அடைந்தார்கள். அதே உத்தியான வனத்தில் அதே பளிங்குக் கல்லின் மீது குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு கொஞ்சியதெல்லாம் அருள்மொழிக்கு நினைவு வந்தது. ஆஹா! அந்த ஆனந்தமான நாட்கள் அப்படியே நீடித்திருக்கக் கூடாதா?

ஆனால், எப்படியிருக்க முடியும்! பார்த்திபனுடைய இருதயத்தின் அடிவாரத்திலே சொல்ல முடியாத வேதனையொன்று பதுங்கிக் கிடந்து, அவனுடைய நெஞ்சை

அரித்துக்கொண்டிருக்கையில், அவர்களு டைய ஆனந்த வாழ்க்கை எப்படி நீடித் திருக்க முடியும்? பார்த்திபனுடைய இந்த அந்தரங்க வேதனையை வெகுகாலம் கழித்தே அருள்மொழி அறிந்தாள். அறிந் தது முதல் அந்த வேதனையில் அவளும் பங்கு கொண்டாள். அதற்குத் தானே கார ணமோ என்று எண்ணி எண்ணி மனம் நொந்தாள்.

ஆமாம்; அவர்களுடைய கல்யாணத் தின்போதே அந்தக் காரணமும் ஏற்பட்டு விட்டது. அருள்மொழி சேர வம்சத்தைச் சேர்ந்த ஒரு சிற்றரசன் மகள். அந்த நாளில் அவளைப் போல் சௌந்தரியவதியான ராஜகுமாரி இல்லையென்று தென்னாடெங் கும் பிரசித்தியாகியிருந்தது. அவளைப் பார்த்திபனுக்கு மணம் செய்விக்க ஏற்பாடு கள் நடந்த பிறகு, காஞ்சி மகேந்திரவர்ம சக்கரவர்த்தியிடமிருந்து சேர மன்னனுக்குத் தூதர்கள் வந்தார்கள். பட்டத்து இளவரசர் நரசிம்ம வர்மருக்கு அருள்மொழியைத் திருமணம் முடிக்க விரும்புவதாகச் சக் கரவர்த்தி செய்தி அனுப்பியிருந்தார். அருள்மொழியின் உற்றார் உறவினருக் கெல்லாம் இது பெரிதும் சம்மதமாயிருந் தது. ஆனால் அருள்மொழி அதற்கு இணங் கவில்லை; பார்த்திப சோழரையே பதி யாகத் தன் மனத்தில் வரித்து விட்டதாக வும், வேறொருவரை மணக்க இசையே னென்றும் கண்டிப்பாய்ச் சொன்னாள். மகேந்திர சக்கரவர்த்தி மிகவும் பெருந் தன்மையுள்ளவராதலால் அதற்குமேல் வற்புறுத்தவில்லை; இளவரசர் நரசிம்மவர் மருக்குப் பாண்டியன் மகளை மணம் முடித்து வைத்தார்.

பார்த்திபனுக்கும் அருள்மொழிக்கும் மணம் நடந்த பிறகுதான் பார்த்திபனுக்கு மேற்கூறிய சம்பவம் தெரிய வந்தது. அவர் சில சமயம், "நீ சாம்ராஜ்ய சக்கரவர்த்தினி யாய் காஞ்சி சிம்மாசனத்தில் வீற்றிருக்க வேண்டியவள்; அதற்கு மாறாக, இந்த உள் ளங்கை அகல சோழ ராஜ்யத்திற்கு ராணியா யிருக்கிறாய்" என்று சொல்லுவதுண்டு. முதலில் இதை ஒரு விளையாட்டுப் பேச் சாகவே அருள்மொழி எண்ணியிருந்தாள். நாளாக ஆக, தன் பதியினுடைய மனத்தில் இந்த எண்ணம், மிக்க வேதனையை அளித்து வந்தது என்று தெரிந்துகொண் டாள். அதைப் போக்குவதற்காக, அவள் எவ்வளவோ பிரயத்தனம் செய்தும் முடிய



வில்லை. விக்கிரமன் பிறந்ததிலிருந்து மகா ராஜாவின் அந்தரங்க வேதனை அதிக மாகியே வந்ததாகத் தெரிந்தது. ஒருசமயம் அவர், ''உன் வயிற்றில் பிறந்த பிள்ளை ஒரு பெரிய சாம்ராஜ்யத்திற்குச் சக்கரவர்த்தி யாயிருக்க வேண்டியவன்... என்னாலல்லவா இன்னொருவருக்குக் கப்பம் கட்டும் சிற நாக அவனுக்கு லபிக்கிறது'' என்பார். இன் னொரு சமயம், ''அருள்மொழி! உன் பிள் ளைக்கு என்னால் சாம்ராஜ்யப் பட்டாபி ஷேகம் செய்து வைக்க முடியாது. ஆனால், வீரத் தந்தையின் புதல்வன் என்ற பட் டத்தை நிச்சயம் அளிப்பேன்!'' என்பார். அவருடைய வாக்கை நிறைவேற் றும் சமயம் இப்போது வந்துவிட் டது. பழைய காலத்து வீர பத்தினி களைப் போல் அவருடன் தானும் உயிர்விடுகிறதாயிருந்தால் பாதக மில்லை. அந்தப் பாக்கியத் தையும் தனக்கு அளிக்க மறுக்கிறாரே? தான் வீரத் தாயாக இருந்து விக் கிரமனை வீரமகனாக வளர்க்க வேணுமாமே? ஐயோ, அவரைப்



பிரிந்த பிறகு உயிரைத்தான் தாங்க முடியுமா?

இப்படி எண்ணியபோது அருள்மொழிக்கு நெஞ்சு பிளந்து விடும் போலிருந்தது. திடீரென்று அழுகை பீறிக்கொண்டு வந்தது. "ஓ!" வென்று கதறிவிட்டாள்.

"அருள்மொழி! உன்னை வீர பத்தினி என்றல்லவா நினைத்தேன்? இவ்வளவு கோழையா நீ?" என்று கடினமான குரலில் கூறிய வார்த்தைகளைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். பார்த்திப மகாராஜா அங்கு நின்றார். உடனே, அவளுடைய அழுகை நின்றது. கண்ணீரும் வறண்டு விட்டது.



"வா! அரண்மனைக்குப் போகலாம்! அழுவதற்கும் சமாதானப் படுத்துவதற்கும் இப்போது நேரமில்லை" என்றார் மகாராஜா.

இருவரும் கைகோத்துக்கொண்டு வாய் பேசாமல் அரண்மனைக்குள் போனார்கள்.

**பா**ர்த்திபனும் அருள்மொழியும் அரண்மனைக்குள் பிரவேசித்து, பூஜாக்கிரஹத்துக்கு வந்தபோது தீபாராதனை நடக்கும் சமயமாயிருந்தது. பூஜாக்கிரஹத்தில் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தது. இடது பக்கத்தில் பார்வதி தேவியின் அற்புதச் சிலை ஒன்று இருந்தது. தேவியின் இரு புறத்திலும் விநாயகரும் முருகக் கடவுளும் வீற்றிருந்தார்கள். இன்னொரு பக்கத்தில் ஸ்ரீதேவி பூதேவி சமேதரான மகா விஷ்ணு தரிசனம் தந்தார். எல்லா விக்கிரகங்களும் செண்பகம், பன்னீர், பாரிஜாதம் முதலிய மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தன.

தெய்வ சந்நிதியில் இளவரசர் விக்கிரமன் கைகூப்பிய வண்ணம் நின்று ஆராதனையைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

அர்ச்சகர் தீபாராதனை செய்து, மூவருக்கும் பிரஸாதம் கொடுத்துவிட்டு, வெளியே சென்றார். விக்கிரமன் மகாராஜாவைப் பார்த்து, "அப்பா! சித்திர மண்டபத்துக்குப் போகலாம் என்றீர்களே?" என்று கேட்டான்.

"இதோ நான் வருகிறேன், விக்கிரமா! நீ முன்னால் போ" என்றார் மகாராஜா.

விக்கிரமன் வெளியே சென்றதும், மகா விஷ்ணுவின் பாதத்தினடியில் வைத்திருந்த நீளவாட்டான மரப்பெட்டியை மகாராஜா சுட்டிக்காட்டிச் சொன்னார். "தேவி! அந்தப் பெட்டிக்குள்ளே என்ன இருக்கிறது என்று என்னை நீ பல தடவை கேட்டிருக்கிறாய். நானும் 'காலம் வரும் போது சொல்லுகிறேன்' என்று சொல்லி வந்திருக்கிறேன். சொல்ல வேண்டிய காலம் இப்போது வந்துவிட்டது. சோழ வம்சத்தின் புராதன பொக்கிஷம் இந்தப் பெட்டிக்குள்ளே இருக்கிறது. இதோ திறந்து காட்டுகிறேன், பார்!"

இவ்விதம் சொல்லிக்கொண்டே மகாராஜா அந்த மரப்பெட்டியைத் திறந்தார். பெட்டிக்குள்ளே பளபளவென்று ஜொலித்த ஓர் உடைவாளும் ஓர் ஓலைச்சுவடியும்

காணப்பட்டன. உடைவாளின் பிடி தங்கத்தினாலானது. இரத்தினங்கள் இழைத்தது. வாளும் எண்ணெய் பூசிக் கூர்மையாய்த் தீட்டி வைத்திருந்தது. ஆகவே பிடியும் வாளும் ஒன்றோடொன்று போட்டியிட்டு ஒளி வீசின. இதற்கு மாறாக ஓலைச்சுவடியோ மிகப் பழைமையானதாய் கருநிறமாயிருந்தது.

பார்த்திபன் சொன்னான்: ''தேவி! இந்த உடைவாள் சோழ வம்சத்திலே முற்காலத்திலே பிரசித்தி பெற்றிருந்த சக்கரவர்த்திகளின் காலத்திலிருந்து வந்தது. கரிகால் வளவனும் நெடுமுடிக் கிள்ளியும் இந்த உடைவாளைத் தரித்து உலகத்தை ஆண்டார்கள். ஓலைச் சுவடியில் உள்ளது நமது தமிழகத்தின் தெய்வப் புலவர் அருளிய திருக்குறள். இந்த உடைவாளும் குறள் நூலும்தான் சோழர் குலத்தின் புராதன பொக்கிஷங்கள். இவற்றை நீ வைத்துக் காப்பாற்றி, விக்கிரமனுக்கு வயது வரும் போது அவனிடம் சேர்ப்பிக்க வேண்டும். அருள்மொழி! இந்தப் புராதன உடைவாளை என் தகப்பனார் அணிந்திருந்தார். ஆனால் நான் அணியவில்லை. கப்பங் கட்டும் சிற்றரசனாயிருந்து கொண்டு, கரிகால் வளவனும் நெடுமுடிக்கிள்ளியும் அணிந்த உடைவாளை அணிய நான் விரும்பவில்லை. விக்கிரமனிடம் நீ இதையும் சொல்ல வேண்டும். எப்போது அவன் ஒரு சின்னஞ்சிறு பிரதேசத்துக்காவது சுதந்திர மன்னனாகிறானோ, அப்போதுதான் இந்த உடைவாளைத் தரிக்கலாமென்று கூற வேண்டும். அக்காலத்தில் இந்த உடைவாளைத் தரித்து இந்த தெய்வத் திருக்குறளில் சொல்லியிருக்கும் வண்ணம் இராஜ்ய பாரம் செய்யும்படியும் கூற வேண்டும். இந்தப் பொறுப்பை உன்னிடம் ஒப்புவிக்கிறேன். அருள்மொழி! இதை நிறைவேற்றுவதாகத் தெய்வ சன்னிதானத்தில் எனக்கு வாக்குறுதி அளிக்க வேண்டும். விக்கிரமனை வீரமகனாக நீ வளர்க்க வேண்டும்.''

இதைக் கேட்ட அருள்மொழி தேவி கண்களில் நீர் ததும்ப விம்முகின்ற குரலில், ''அப்படியே செய்கிறேன் மகாராஜா!'' என்றாள். பார்த்திபன் அப்போது ''இறைவன் அதற்கு வேண்டிய தைரியத்தை உனக்கு அளிக்கட்டும்!'' என்று சொல்லி அருள்மொழியைத் தழுவிக்கொண்டு அவளுடைய கண்களில் பெருகிய கண்ணீரைத் தம்முடைய மேலாடையால் துடைத்தார்.

## 8.சித்திர மண்டபம்

உறையூர் தெற்கு ராஜ வீதியிலிருந்த சித்திர மண்டபம் அந்தக் காலத்தில் தென்னாடெங்கும் புகழ் வாய்ந்திருந்தது. காஞ்சியிலுள்ள மகேந்திர சக்கரவர்த்தியின் பேர் பெற்ற சித்திர மண்டபம்கூட உறையூர் சித்திர மண்டபத்துக்கு நிகராகாது என்று ஜனங்கள் பேசுவது சகஜமாயிருந்தது. பார்த் திப மகாராஜாவும் இளவரசர் விக்கிரமனும் வெண் புரவிகளின் மீதேறி இந்தச் சித்திர மண்டபத்தின் வாசலை அடைந்த அதே சமயத்தில், அங்கே படகோட்டி பொன்னனும் வந்து சேர்ந்தான். இந்த அகாலவேளையில் மகாராஜாவைப் பார்க்க முடியுமோ என்னவோ என்ற கவலையுடன் வந்த பொன்னன், திடீரென்று மகாராஜாவைப் பார்த்ததும் இன்னது சொல்வதென்று தெரியாமல் திகைத்தான். ''மகாராஜா...'' என்னும்போதே அவனுக்கு நாக்குழறியது. அந்தக் குழறிய குரலைக் கேட்டு மகாராஜாவும் இளவரசரும் அவனைத் திரும்பிப் பார்த்தார்கள். ''பொன்னா! நீ எங்கே வந்தாய்?'' என்றார் மகாராஜா. பொன்னனின் மௌனத்தைக் கண்டு ஒருவாறு அவன் வந்த காரணத்தை ஊகித்தவராய், குதிரை மீதிருந்து கீழிறங்கினார். இளவரசர் விக்கிரமனும் லாகவமாய்க் குதிரை மீதிருந்து குதித்தார். ''பொன்னா!

**“ கப்பங் கட்டும் சிற்றரசனாயிருந்து கொண்டு. கரிகால் வளவனும் நெடுமுடிக்கிள்ளியும் அணிந்த உடைவாளை அணிய நான் விரும்பவில்லை ”**



இந்தத் தீவர்த்தியை வாங்கிக் கொள்!'' என்றார் மகாராஜா. அருகே தீவர்த்தி வைத்துக் கொண்டு நின்ற ஏவலாளனிடமிருந்து பொன்னன் தீவர்த்தியை வாங்கிக்கொண்டான். அந்த வேளையில் மகாராஜா எதற்காக சித்திர மண்டபத்துக்கு வந்திருக்கிறார்; எதற்காகத் தன்னை தீவர்த்தியுடன் பின்தொடரச் சொல்லுகிறார் என்பதொன்றும் அவனுக்குப் புரியாவிட்டாலும், மகாராஜா தன்னைத் திரும்பிப் போகச் சொல்லாமல் தம்முடன் வரும்படி சொன்னதில் அளவிலாத குதூகலமுண்டாயிற்று. மகாராஜாவும் இளவரசரும் முன் செல்ல, பொன்னன் தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு சித்திர மண்டபத்துக்குள் புகுந்தான்.

அந்தச் சித்திர மண்டபத்துக்குள் முதல் முதலாகப் பிரவேசிக்கிறவர்களுக்கு 'நமக்குள்ள இரண்டு கண் போதாது; இரண்டாயிரம் கண் இருந்தால்தான் இங்கேயுள்ள சித்திரங்களை ஒருவாறு பார்த்துத் திருப்தியடையலாம்' என்று தோன்றும். அந்த விஸ்தாரமான மண்டபத்தின் விசாலமான சுவர்களில் விதவிதமான வர்ணங்களில் பலவகைச் சித்திரங்கள் தீட்டப் பெற்றிருந்தன. அந்த மண்டபத்தைத் தாங்கிய சிற்ப வேலைப்பாடுள்ள தூண்களிலும் சித்திரங்கள் காணப்பட்டன. மேல் விமானத்தின் உட்புறங்களையும் சித்திரங்கள் அலங்கரித்தன. ஒரு சுவரில் ததீசி முனிவரிடம் இந்திரன் வச்சிராயுதத்தைப் பெறுவது, இந்திரன் விருத்திராசுரனைச் சம்ஹரிப்பது, பிறகு இந்திரலோகம் வருவது, தேவர்களும் தேவ மாதர்களும் இந்திரனை எதிர்கொண்டு வரவேற்பது, இந்திரனுடைய சபையில் தேவ மாதர்கள் நடனம் புரிவது முதலிய காட்சிகள் சித்திரிக்கப்பட்டிருந்தன. இன்னொரு பக்கத்தில், திருப்பாற்கடலில் மந்திரகிரியை மத்தாகவும் வாஸுகியைக் கயிறாகவும் கொண்டு, தேவர்கள், ஒரு பக்கமும் அசுரர்கள் ஒரு பக்கமும் நின்று கடையும் பிரம்மாண்டமான காட்சி சித்திரிக்கப்பட்டிருந்தது. அடுத்தாற்போல, பரமசிவனுடைய தவத்தைக் கலைப்பதற்குக் காமதேவன் மலர்களைத் தொடுப்பது முதல், குமரப் பெருமான் ஜனனம் வரையிலும் உள்ள காட்சிகள் காணப்பட்டன. இந்த உருவங்கள் எல்லாம் கேவலம் உயிரற்ற சித்திரங்களாகத் தோன்றவில்லை. கால், கை, முகம் இவற்றின் சரியான அளவு எடுத்துச் சாமுத்திரிகா லட்சணத்துக்கு இணங்க எழுதப்பட்டிருக்கவுமில்லை. ஆனாலும், அந்த உருவங்களின் ஒவ்வொரு அவயவத்திலும் காணப்பட்ட நெளிவும், முகத்தில் பொலிந்த பாவமும், தத்ரூபமாய் அந்தத் தேவர்களின் முன்னால் நாம் நிற்கிறோமென்னும் மயக்கத்தை உண்டாக்கின.

பிரதி மாதம் மூன்று தினங்கள் இந்தச் சித்திர மண்டபம், பிரஜைகள் எல்லாரும் பார்ப்பதற்கென்று திறந்து வைக்கப்படுவதுண்டு. அவ்வாறு திறந்திருந்த நாட்களில் பொன்னன் இரண்டு மூன்று தடவை இந்தச் சித்தரங்களைப் பார்த்து மகிழ்ந்திருக்கிறான். இப்போதும் அந்தச் சித்திரங்கள் அவனுடைய கண்ணையும் கருத்தையும் கவரத்தான் செய்தன. ஆனாலும் இன்று அவற்றை நின்று பார்க்க முடியாதபடி மகாராஜாவும் இளவரசரும் முன்னால் விரைந்து போய்க் கொண்டிருந்தபடியால், பொன்னனும் அவர்களைப் பின்தொடர்ந்து விரைந்து சென்றான்.

சித்திர மண்டபத்தின் இரண்டு மூன்று கட்டுக்களையும் தாண்டிச் சென்று கடைசியாக, பூட்டிய கதவையுடைய ஒரு வாசற்படியண்டை மகாராஜா நின்றார். முன்னொரு தடவை பொன்னன் இதே இடத்தில் நின்று, இந்த வாசற்படிக்கு உட்புறத்தில் என்ன இருக்குமோ என்று யோசித்திருக்கிறான். இந்தக் கதவைத் திறக்கக் கூடாதென்பது மகாராஜாவின் கட்டளை என்று காவலாளர்கள் அப்போது தெரிவித்ததுண்டு. மகாராஜா இப்போது அந்தக் கதவண்டை வந்து நின்று, தம் கையிலிருந்த சாவியினால் பூட்டைத் திறக்கத் தொடங்கியதும் பொன்னனுடைய ஆவல் அளவு கடந்ததாயிற்று.

"குழந்தாய்! மறுபடியும் இந்தச் சோழநாடு அம்மாதிரி மகோன்னத நிலையை அடைய வேண்டுமென்பது என் உள்ளத்தில் பொங்கும் ஆசை."

'இதனுள்ளே ஏதோ பெரிய அதிசயம் இருக்கிறது. அதை நாம் இப்போது பார்க்கப் போகிறோம்' என்று எண்ணியபோது அவனுடைய நெஞ்சு படபடவென்று அடித்துக்கொண்டது.

கதவு திறந்ததும், "பொன்னா! நீ முதலில் உள்ளே போ! தீவர்த்தியை நன்றாய்த் தூக்கிப் பிடி! சுவருக்கு ரொம்பச் சமீபமாய்க் கொண்டு போகாதே! தீவர்த்திப் புகையினால் சித்திரங்கள் கெட்டுப் போகும்" என்றார் மகாராஜா.

பொன்னன் உள்ளே போய் தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்தான். அங்கிருந்த சுவர்களிலும் சித்திரங்கள்தான் தீட்டியிருந்தன. ஆனால், அவை என்ன சித்திரங்கள், எதைக் குறிப்பிடுகின்றன என்பது அவனுக்குத் தெரியவில்லை.

பொன்னனுக்குப் பின்னால், விக்கிரமனுடைய கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு பார்த்திப மகாராஜா அந்த இருள் சூழ்ந்த மண்டபத்துக்குள்ளே புகுந்தார்.

"குழந்தாய், பூட்டி வைத்திருக்கும் இந்த மண்டபத்துக்குள்ளே என்ன இருக்கிறது என்று பல தடவை என்னைக் கேட்டிருக்கிறாயே! உனக்கு இன்னும் கொஞ்சம் வயதான பிறகு இந்தச் சித்திரங்களைக் காட்ட வேணுமென்றிருந்தேன். ஆனால் இப்போதே காட்ட வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. விக்கிரமா! இந்த மண்டபத்தை நான் வேணுமென்றே இருளடைந்ததாய் வைத்திருந்தேன். இதற்குள்ளே என்னைத் தவிர வேறு யாரும் வந்ததில்லை. யாரும் இந்தச் சுவரிலுள்ள சித்திரங்களைப் பார்த்ததுமில்லை...! பொன்னா! தீவர்த்தியைத் தூக்கிப் பிடி!" என்றார் மகாராஜா.

அவருடைய பேச்சில் கவனமாயிருந்த பொன்னன், சட்டென்று தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்தான்.

"அதோ, அந்த முதல் சித்திரத்தைப் பார் குழந்தாய். அதில் என்ன தெரிகிறது?" என்று மகாராஜா கேட்டார்.

"யுத்தத்துக்குப் படை கிளம்புகிறது. ஆஹா எவ்வளவு பெரிய சைன்யம்! எவ்வளவு யானைகள்; எவ்வளவு தேர்கள்; குதிரைகள்; எவ்வளவு காலாட் படைகள்" என்று விக்கிரமன் வியப்புடன் கூறினான்.

பிறகு, சட்டென்று திரும்பித் தந்தையின் முகத்தைப் பார்த்து, "அப்பா...!" என்று தயங்கினான்.

"என்ன விக்கிரமா? கேள்!" என்றார் மகாராஜா.

"ஒன்றுமில்லை, அப்பா! இந்தச் சித்திரங்கள் யார் எழுதியவையென்று யோசித்தேன்" என்றான் விக்கிரமன்.

"நீ நினைத்தது சரிதான் குழந்தாய்! என் கையினால், நானே எழுதிய சித்திரங்கள் தாம் இவை. இந்தப் பன்னிரண்டு வருஷ காலமாய் இரவிலும், பகலிலும் தூங்கும் போதும் விழித்திருக்கும்போதும் நான் கண்டு வந்த கனவுகளைத்தான் இங்கே எழுதியிருக்கிறேன் குழந்தாய். நன்றாய்ப் பார்! யாருடைய சைன்யங்கள் இவை, தெரிகிறதா?"

"ஆஹா! தெரிகிறது. முன்னால் புலிக் கொடி போகிறதல்லவா? சோழ ராஜ்யத்தின் படைகள்தான் இவை. ஆனால் அப்பா!" என்று மறுபடியும் தயங்கினான் விக்கிரமன்.

"என்ன கேட்க வேணுமோ கேள் விக்கிரமா!"

"அவ்வளவு கம்பீரமாக நடந்து போகும் அந்தப் பட்டத்து யானையின் மேல் யானைப் பாகன் மட்டுந்தானே இருக்கிறான். அம்பாரியில் யாரும் இல்லையே, அப்பா!"

"நல்ல கேள்வி கேட்டாய்! வேண்டுமென்றேதான் அப்படி யானையின் மேல் யாரும் இல்லாமல் விட்டிருக்கிறேன். இந்தச் சோழ வம்சத்திலே எந்தத் தீரன் இம்மாதிரி பெரிய சைன்யத்தைத் திரட்டிக்கொண்டு திக்விஜயம் செய்வதற்காகக் கிளம்பிப் போகிறானோ, அவனுடைய உருவத்தை அந்த யானையின் மேல்



வரைய வேணும் குழந்தாய்! தற்சமயம் இந்த சோழராஜ்யம் ஒரு கையகலமுள்ள சிற்றரசாக இருக்கிறது. வடக்கே பல்லவர்களும் தெற்கே பாண்டியர்களும் மேற்கே சேரர்களும் இந்தச் சோழ நாட்டை நெருக்கிச் சிறைப் பிடித்திருக்கிறார்கள். ஆனால் இந்த நாடு எப்போதும் இப்படியிருந்ததில்லை. ஒரு காலத்தில் நம்முடைய வம்சம் மிக்க புகழ் வாய்ந்திருந்தது. விக்கிரமா! உன்னுடைய மூதாதைகளிலே கரிகால் வளவன் நெடுமுடிக் கிள்ளி முதலிய மகாவீரர்கள் இருந்திருக்கிறார்கள். சோழர் என்ற பெயரைக் கேட்டதும் மாற்றரசர்கள் நடுங்கும்படியாக அவர்கள் வீரச் செயல்கள் புரிந்திருக்கிறார்கள். அப்போது பல்லவர் என்ற பெயரே இந்தத் தென்னாட்டில் இருந்ததில்லை. சோழ சாம்ராஜ்யம் வடக்கே வெகு தூரம் பரவியிருந்தது. அந்நாளில் பாண்டியர்களும் சேரர்களும் சோழ மன்னர்களுக்குத் திறை செலுத்திக் கொண்டிருந்தார்கள். கடல்களுக்கு அப்பால் எத்தனையோ தூரத்திலுள்ள அரசர்களெல்லாம் சோழ சக்கரவர்த்திகளுக்குக் காணிக்கைகளுடன் தூதர்களை அனுப்பி வந்தார்கள். இப்போது கடல் மல்லைத் துறைமுகம் பிரசித்தி பெற்றிருப்பதுபோல அந்நாளில் காவேரிப்பட்டினம் பெரிய துறைமுகமாயிருந்தது. காவேரிப் பட்டினத்திலிருந்து பெரிய கப்பல்கள் கிளம்பித் தூர தூர தேசங்களுக்கெல்லாம் சென்று, பொன்னும் மணியும் கொண்டு வந்து, சோழ மன்னர்களின் பொக்கிஷத்தை நிரப்பி வந்தன. குழந்தாய்! மறுபடியும் இந்தச் சோழநாடு அம்மாதிரி மகோன்னத நிலையை அடைய வேண்டுமென்பது என் உள்ளத்தில் பொங்கும் ஆசை. நான் இரவிலும் பகலிலும் காணும் கனவு! அதோ அந்தச் சித்திரத்தைப் பார்!''



**கடல் சூழ்ந்த அந்நாடுகளில் சோழர்களின் புலிக் கொடி கம்பீரமாய்ப் பறக்கிறது**

இவ்விதம் மகாராஜா ஆவேசம் கொண்டவர் போல் பேசிக்கொண்டு, மேலும் மேலும் சித்திரங்களைக் காட்டிக் கொண்டே போனார். அடுத்த சித்திரத்தில், சோழ சைனியம் ஒரு பெரிய நதியைக் கடக்கும் காட்சி காணப்பட்டது. பிறகு அப்படைகள் பெரியதோர் மலையில் ஏறிச் சென்றன. அப்பால் ஒரு பெரிய யுத்தக் காட்சி காணப்பட்டது. அதிலே சோழர் சைன்யம் வெற்றியடைந்த பிறகு மாற்றரசர்கள் காணிக்கைகளுடன் வந்து சரணாகதி செய்கிறார்கள்.

இம்மாதிரி பல நதிகளைத் தாண்டியும், பல மலைகளைக் கடந்தும், பல மன்னர்களைக் கொன்றும் கடைசியில் சோழ சைனியம் இமயமலையை அடைகிறது. பர்வத ராஜாவான இமயத்தின் உச்சியில் சோழர்களின் புலிக்கொடி நாட்டப்படுகிறது. இதற்குப் பிறகு சோழ நாட்டின் தலைநகருக்குச் சைன்யம் திரும்பி வருவதும் நகர மாந்தர் அந்த வீரப்படையை எதிர்கொண்டழைப்பதுமான கோலாகலக் காட்சிகள்.

இன்னொரு பக்கத்தில் புலிக்கொடி பறக்கும் பெரிய பெரிய கப்பல்கள் துறைமுகங்களிலிருந்த கிளம்பும் காட்சிகள் அற்புதமாகச் சித்திரிக்கப்பட்டிருந்தன. அந்தக் கப்பல்கள் தூரதூர தேசங்களுக்குப் போய்ச் சேருகின்றன; அந்தந்த தேசங்களின் மன்னர்கள் பரிவாரங்களுடன் எதிர்கொண்டு வந்து, சோழ நாட்டின் தூதர்களை உபசரிக்கிறார்கள். கடல் சூழ்ந்த அந்நாடுகளில் சோழர்களின் புலிக்கொடி கம்பீரமாய்ப் பறக்கிறது. புலிக்கொடி பறக்கும் தேசங்களிலெல்லாம் பெரிய பெரிய கோயில்களும் கோபுரங்களும் வானை அளாவி எழுகின்றன. இத்தகைய அற்புதமான சித்திரங்களே அந்த மண்டபம் முழுவதும் நிறைந்திருந்தன.

(தொடரும்)



# எதுவும் வேண்டாம்!

'இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே' என்ற தொண்டரடிப் பொடியாழ்வாரின் 'பச்சைமாமலை போல் மேனி' என்று துவங்கும் பாடல் பிரசித்த மானது. இந்திர பதவி கிடைத்தாலும் வேண்டாம். திருமாலைத் தொழுதால் போதும் என்ற கருத்து பிற ஆழ்வார் பாடல்களிலும் அவ்வப்போது வெளிப் படுகின்றது. உதாரணமாக பூதத்தாழ்வார் இரண்டாம் திருவந்தாதியில் பாடியிருக்கும் இந்த வெண்பா.

*மண்ணுலகம் ஆளேனே;*
*வானவர்க்கும் வானவனாய்,*
*விண்ணுலகம் தன் அகத்து மேவேனே*
*- நண்ணித்*
*திருமாலை, செங்கண் நெடியானை,*
*எங்கள்*
*பெருமானை, கை தொழுத பின்*

(மேவேனே - நெருங்க மாட்டேன், நண்ணி - கிட்டி)

இந்தப் பூமி முழுவதையும் ஆளக் கொடுத்தாலும் ஆள மாட்டேன். தேவர் களுக்குத் தேவனாய் சொர்க்கத்துக்குச் செல்லும் சந்தர்ப்பம் கிடைத்தாலும் போகமாட்டேன். எங்கள் பெருமாளை வணங்கிய பின் இவையெல்லாம் எனக்குத் தேவையில்லை.

பூதத்தாழ்வார் என்ற பெயர் எப்படி ஏற்பட்டது? முதலாழ்வார்கள், பொய் கையார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் மூவரும் அடைமொழியால் குறிக்கப் பட்டுள்ளனர். பூதம் என்றால் உயிர் என்று ஓர் அர்த்தம் உண்டு. பூத உடல் என்ற பதப்பிரயோகம் கேள்விப்பட்டிருப்பீர்கள். தன் உயிர் திருமாலுக்கே என்று சொன்ன தால் இவருக்கு பூதத்தாழ்வார் என்ற பெயர் ஏற்பட்டது என்று ஒரு கதை சொல்வார்கள். அந்தக் கூற்றை நிரூபிக்கும் வகையில் உள்ளது இந்தப் பாசுரம். சிவந்த கண்கள் கொண்ட உயரமான திருமாலை நெருங்கித் தொழுத பின் வேறு எது கிடைத்தாலும் வேண்டாம் என்கிறார். இன்று நம்மில் பெரும் பாலானோர் இறைவனைத் தொழு வதே மண்ணுலகம் ஆள்வதற்கும் பெரிய பதவிகள் கிடைப்பதற்கும் தான். பூதத்தாழ்வார் போன்ற அப்பாவித் துறவிகள்தாம் இதெல் லாம் வேண்டாம் தரிசனம் மட்டும் போதும் என்பார்கள்.

(படிக்கலாம்)

சுஜாதா

# சந்தோஷக் குடுவை!

கதிர்பாரதி

உயிர்க் காற்றை
உள்வாங்கி
உப்பிப் பெருத்த
பலூன்களை
குழந்தைகளுக்கு
நிரம்பப் பிடிக்கின்றன

குழந்தைகளின்
மனத்தைப்போல்
பலூன்களும்
மேல்நோக்கி
எழுவதால்
நிகழ்ந்திருக்கலாம்
இந்தப் பிடித்தம்

தகதகக்கும் தேர்
தங்கநகை அம்மன்
வானம் துளைக்கும்
வாணம்....
இவற்றுக்கிடையில்
திருவிழா
நெரிசலினூடே
அநாயாசமாகக்
குழந்தைகளை
ஈர்த்துவிடும்
பலூனுக்கும்
தேவதைக்கும்
அதிகமில்லை
வித்தியாசம்

குழந்தைகள் கைசேர்ந்த
பலூன்கள்
உயிர்த்துவிடுவதை
மனத்தால் பார்ப்பவர்கள்
உணரக்கூடும்

தாயால் தேற்ற முடியாத
சேயின் கண்ணீரை
பலூன்கள் தீர்த்துவிடும்
பல நேரங்களில்

வண்ணங்களின்
விலாசமெழுதும்
பலூன்கள்
குழந்தைகளின்
சந்தோஷக் குடுவை

காசு கொடுத்து
இரும்புக் குண்டுகளால்
பலூன்களைத்
துளைக்கையில்
தோன்றுமெனக்கு
குழந்தைகளின்
சந்தோஷத்தைக்
கொல்வதாய்

படம்: ஸ்ரீஹரி





"தங்களைப் பாட புலவர் ஒருவர் வந்துள்ளார் மன்னா..."

"மன்னர் இல்லை, போருக்குச் சென்றுவிட்டார் என்று சொல்லிவிடும்"

"அட... நம்பும்படியான தகவலாகச் சொல்லுங்கள் மன்னா..."

கே.ஆனந்தன்
தர்மபுரி





"அவனை ஏன் கைது செஞ்சீங்க?"

"எவ்வளவு தைரியம் இருந்தா தொப்பையைக் குறைக்க நூறு வழிகள் புத்தகத்தை நம்ம ஸ்டேஷனுக்குள்ளேயே வந்து விப்பான்!"

தஞ்சை
அனார்கலி





"ஹெட் க்ளார்க் கோவிந்தனை ஒரு ஃபைலைப் பார்க்கச் சொன்னேனே... எவ்வளவு தூரத்துல இருக்கு?"

"அவர் தலைக்கு அடியில் சார்!"

சாயம்
வெ.ராஜாராமன்





"முட்டை போடும் இரண்டு உயிரினங்கள் பெயரைச் சொல்லு...?"

"ஆசிரியர், சத்துணவு ஆயா...!"

திருப்பரங்குன்றம்
சங்கர்

# சோனியாகாந்தியின்

ஸ்டாலினை மக்கள் ஏற்றுக் கொண்டுவிட்டார்கள். ஆனால் கனிமொழியை மத்திய அமைச்சராக்குவது தவறு!

**பாரதிய ஜனதா கட்சியின் மூத்த தலைவர்களுள் ஒருவரும், முன்னாள் மத்திய அமைச்சருமான ஜனா.கிருஷ்ணமூர்த்தி அண்மையில் சென்னை வந்திருந்தார். அவர் நமக்காக அளித்த பிரத்யேகப் பேட்டியின் முக்கியமான பகுதிகள்...**

**பி.ஜே.பி. மிகவும் சோர்ந்து போய்விட்டது போலத் தோன்றுகிறதே?**

''அரசியல் கட்சி என்றால் ஏற்றத் தாழ்வுகள் இருக்கவே செய்யும். இன்றைக்கு எல்லாக் கட்சிகளுக்குள்ளும் பிரச்னைகள் இருக்கின்றன. அரசியல் மிகவும் தரம் தாழ்ந்து போய்விட்டது.''

**அரசியல் தரம்தாழ்ந்து போனதற்கு அரசியல் கட்சிகள் மலிவான அரசியல் நடத்துவதுதானே காரணம்?**

''நம் நாட்டில் ஜனநாயகம் என்பதற்கு விபரீதமான அர்த்தம் கொள்ளப்பட்டிருக்கிறது. ஜனநாயகம் என்பது தேர்தலின் மூலமாக மக்களின் விருப்பத்தைத் தெரிந்து கொள்வது. தேர்தல் முடிந்துவிட்டால் ஆளும்கட்சியும் எதிர்கட்சியும் மற்ற கட்சிகளும் மக்களுக்கு எப்படிப் பணியாற்றலாம் என்பதில்தான் கவனம் செலுத்த வேண்டும். ஆனால், இன்றைக்குத் தேர்தல் சமயத்தில் கட்சிகளுக்குள் ஏற்படும் மோதல்போக்கு, தேர்தலுக்குப் பின், ஆட்சி அமைத்த பிறகும் தொடருகிறது. ஆளுங்கட்சி எதிர்கட்சியை மதிப்பதில்லை. எதிர்கட்சி ஆளுங்கட்சியை மதிப்பதில்லை. மக்கள் ஆட்சியில் அமர்த்திய ஆளும் கட்சியை எதிர்கட்சி மதிக்க வேண்டும்; ஆளும்கட்சி, எதிர்கட்சிக்கு மதிப்பும், மரியாதையும் கொடுக்க வேண்டும்.''

**இன்று பா.ஜ.க. ஓர் ஆக்க**

பா.ஜ.க.

# ரகசிய திட்டம்!



**பூர்வமான எதிர்கட்சியாகத்தான் செயல்பட்டுக் கொண்டிருக்கிறதா?**

''அதற்கான அனைத்து முயற்சிகளையும் செய்து கொண்டிருக்கிறது. உதாரணமாக, அணுசக்தி ஒப்பந்தத்தை ஆரம்பித்து வைத்த எங்களுக்கு, அந்த விவகாரத்தின் நெளிவு சுளிவுகள் அனைத்தும் தெரியும். ஆகவே, இந்த ஒப்பந்தத்தில் இன்னின்ன அம்சங்கள் நம் நாட்டு நலனுக்கு உகந்ததில்லை என்று நாங்கள் சுட்டிக்காட்டும் போது, ஆளும் கட்சி அவற்றை மதிக்க வேண்டும். ஆனால் எங்கே மதிக்கிறார்கள்?! இந்த ஒப்பந்தத்தை கம்யூனிஸ்ட்களும் எதிர்க்கிறார்கள். ஆளும் கட்சி என்ன செய்திருக்க வேண்டும்? ஒப்பந்தத்தில் கையெழுதிடுவதற்கு முன்பாக அனைத்து முக்கிய கட்சிகளையும் கலந்து ஆலோசனை செய்திருக்க வேண்டும். அப்படி காங்கிரஸ் செய்யவில்லை. எதிர்கட்சிகளையும் மக்கள்தானே தேர்ந்தெடுத்துப் பாராளுமன்றத்துக்கு அனுப்புகிறார்கள்? பார்க்கப் போனால், காங்கிரஸ் கட்சிக்கும் பா.ஜ.க.வுக்கும் எம்.பி.க்கள் எண்ணிக்கையில் பெரிய வித்தியாசம் ஒன்றுமில்லை. நாடு முன்னேற ஒரே வழி, நாட்டின் முக்கிய அரசியல் கட்சிகள் அனைத்தும் ஒன்றாக அமர்ந்து, 'நீ பெரியவனா? நான் பெரியவனா?' என்று ஈகோ பார்க்காமல் இந்த நாட்டைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். ஆக்கபூர்வமான செயல் திட்டங்களை உருவாக்கிச் செயல்படுத்த வேண்டும்.''

**உத்தரப்பிரதேச தேர்தல்கள் பா.ஜ.க.வுக்குப் பெரும் பின்னடைவுதானே?**

''ஆம், எங்கள் கட்சியின் பலம் என்பது தொண்டர்கள்தான். தொண்டர்களுக்கும், தலைவர்களுக்கும் இடையில் மிக நெருக்கமான உறவு என்பது இன்னொரு ப்ளஸ் பாயிண்ட். உ.பி.யிலும் சரி, மத்தியிலும் சரி பா.ஜ.க. ஆட்சிக்கு வந்ததை அடுத்து, தலைவர்கள் நிர்வாகத்தில் கவனம் செலுத்த வேண்டியிருந்த காரணத்தால், தொண்டர்களுக்கும், தலைவர்களுக்கும் இடையிலான நெருங்கிய உறவில் இடைவெளி ஏற்பட்டு விட்டது. தொண்டர்களை ஊக்கமூட்டி கட்சிப் பணியாற்ற வைப்பதில் ஒரு சுணக்கம் ஏற்பட்டுவிட்டது. இப்போது அந்த இடைவெளியை அகற்ற நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. அடுத்த பொதுத் தேர்தலுக்குள் கட்சி புதுத் தெம்பு பெற்றுவிடும்.''

**மாயாவதி, உங்கள் பலமாகக் கருதப்பட்ட உயர் ஜாதியினர் வோட்டு வங்கியைக் கையகப் படுத்தி உ.பி. முதலமைச்சர் ஆகி விட்டார். அடுத்து, 'அயோத்தியில் ராமர் கோயில் கட்டுகிறேன்' என்று மாயாவதி அறிக்கை விட்டால், என்ன ஆகும்?**

''எங்கள் கட்சிக்கு '84-ல் இரண்டே இரண்டு பாராளுமன்ற உறுப்பினர்கள்தான் இருந்தார்கள். படிப்படியாக வளர்ந்து ஆட்சிக்கு வரவில்லையா? அந்த வளர்ச்சிக்கு நாங்கள் அயோத்தி பிரச்னையை எடுத்துக்கொண்டது மட்டுமா காரணம்? ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். ராமர் கோயில் கட்டுவது என்பது விஸ்வ ஹிந்து பரிஷத்தின் திட்டம். அவர்களுக்கு நாங்கள் ஆதரவு தெரிவித்தோம். நாங்கள் ஆட்சிக்கு வந்ததற்கோ, ஆட்சியை இழந்ததற்கோ ராமர் கோயில் காரணமல்ல.''

**மத்தியில் ஒரு குடும்ப அரசி**

## தலைவர் ஜனா.கிருஷ்ணமூர்த்தி பேட்டி

யலை எதிர்க்கும் நீங்கள், தமிழகத்தில் மௌனம் சாதிப்பதேன்?

''ஒருவர் முதலமைச்சரின் மகன் என்பதாலேயே அவரை அரசியலில் நுழைப்பது எவ்வளவு தவறோ, அதேபோல ஒருவர் முதலமைச்சரின் மகன் என்பதாலேயே அவர் பெற்றுள்ள மற்ற தகுதிகளை மறுத்து, அரசியலுக்கு வரக்கூடாது என்று சொல்வதும் தவறு. ஸ்டாலின் பல வருடங்களாக கட்சியில் இருந்து வருபவர். தேர்தலில் போட்டியிட்டு எம்.எல்.ஏ.வாக இருந்திருக்கிறார். மேயர் தேர்தலில் வெற்றி பெற்று சென்னை மாநகர மேயராக இருந்திருக்கிறார். தற்போது அமைச்சராக இருக்கிறார். கட்சி அவரை ஏற்றுக் கொண்டிருக்கிறது; மக்கள் அவரை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். இந்த அடிப்படையில் பார்த்தால் ராகுல் காந்தியையோ, கனிமொழியையோ மத்திய அமைச்சராக்குவதுதான் தவறு.''

**ராகுல்காந்தியை முன்னிறுத்தி உ.பி.தேர்தலில் பிரசாரம் செய்த காங்கிரஸ் படுதோல்வி கண்டது. வரும் பாராளுமன்றத் தேர்தலில் சோனியாதான் பிரதமர் என்று முன்னிறுத்தினால் காங்கிரஸ் வெற்றி பெற வாய்ப்பு இருப்பதாக நினைக்கிறீர்களா?**

''கடந்த தேர்தலில் காங்கிரஸ் கூட்டணி ஆட்சி அமைக்க முன்வந்தபோது நடந்த விஷயம் ஒன்று நம்பத் தகுந்தவர்கள் மூலம் எனக்குத் தெரியவந்தது. கூட்டணியின் தலைவர் என்ற முறையில் சோனியா காந்திதான் பிரதமராக விரும்பினார். ஜனாதிபதி கலாமைச் சந்தித்து அதற்கு உரிமை கோரினார். ஆனால், கலாம் சோனியாவைப் பிரதமராகப் பதவிப் பிரமாணம் செய்து வைப்பதற்கு முன்பு, அந்நிய நாட்டில் பிறந்த ஒருவர் இந்தியப் பிரதமர் ஆவது குறித்து சுப்ரீம் கோர்ட்டின் கருத்தைக் கேட்பேன் என்று சொன்னாராம்! உடனே, சோனியா பயந்து பின்வாங்கி விட்டாராம். காரணம், சுப்ரீம் கோர்ட் ஆட்சேபணை எழுப்பினால், சோனியாவின் பிரதமர் கனவில் நிரந்தரமாக அடி விழுந்து விடுமல்லவா? எனவே, மன்மோகன் சிங்கைப் பிரதமராக்கிவிட்டார். எனவேதான் கலாமை இரண்டாம் முறையாக ஜனாதிபதியாக்க அவர் விரும்பவில்லை. வரும் பொதுத் தேர்தலில், மறுபடி அதுபோல ஒரு சிக்கல் தமக்கு வந்துவிடக் கூடாது என்பதற்காக, தமது விருப்பத்தைச் சிரமேற்கொண்டு செய்து முடிக்கக்கூடிய ஒருவரை ஜனாதிபதியாக்கத் திட்டமிட்டு, பிரதிபா பாட்டீலை ஜனாதிபதியாக்கி இருக்கிறாராம். ஆனால், மக்கள் முட்டாள்கள் இல்லை. சோனியா பிரதமர் என்று அறிவித்தால், காங்கிரஸுக்கு வருகிற வோட்டும் வராது; வரும் தேர்தலில் சோனியாவுக்கு மக்கள் தக்க பாடம் புகட்டு வார்கள்.''



“ **சுப்ரீம் கோர்ட்டின் கருத்தைக் கேட்பேன் என்று கலாம் சொன்னாராம்! சோனியா பயந்து பின்வாங்கி விட்டாராம்!** ”



- **எஸ்.சந்திரமௌலி**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**

மேஷம்: நினைத்த காரியம் நிறைவேறும். வாக்கு வன்மை மேலோங்கும். கல்வி வளம் உயரும். உடல் ஆரோக்கியம் சீராகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் இருக்கும். குரு/சனி/ராகு/கேது வழிபட்டு வர கஷ்டங்கள் விலகி நற்பலன் மிகுதி ஆகும்.

ரிஷபம்: நீண்ட தூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். வேலையில் இடமாற்றம் ஏற்படும். திருமணம் கைகூடும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். வராத பணம் வரும். ராகு/கேது/சனி வழிபட்டு வர சிரமங்கள் விலகி நற்பலன் உண்டாகும்.

மிதுனம்: வேலையில் நல்ல பெயர் கிடைக்கும். மனதைரியம், தன்னம்பிக்கை அதிகரிக்கும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

கடகம்: புதிய திருப்பம் ஏற்படும். வாக்கு வன்மை மேலோங்கும். வீடு, மனை வாங்க நல்ல தருணம். கல்வியில்

# நடக்குமென்பார்; நடக்கும்!

19.8.07 முதல் 25.8.07 வரை

அமீர்கானோட நான் நடிக்கிற முதல் இந்திப் படம் ஹிட்டாகுமான்னு பார்த்து சொல்லுங்க சார்...

**தஞ்சை பரத்வாஜ்**

அக்கறை எடுத்துப் படிப்பது நற்பலனைத் தரும். மறைமுக எதிர்ப்பு, தொல்லை உண்டாகும். ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம்:** திடீர் தனயோகத்தை அளிக்கும். சுப நிகழ்ச்சி கைகூடும். வியாபாரத்தில் முற்போக்கான சூழ்நிலை உண்டாகும். குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. உடல் ஆரோக்கியம் சீராகும். ராகு/கேது/சனி/குரு வழிபாடு செய்து வர சிரமங்கள் விலகி நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** எதிர்பாராத நற்பலன் கிட்டும். கல்வி வளம் மேலோங்கும். மேல்நாட்டு அழைப்பு கிட்டும். தந்தையின் உடல் நிலை பாதிக்கும். வியாபாரத்தில் நல்ல வளர்ச்சி ஏற்படும். கூட்டாளிகள் விலகிப் போவார்கள். சனி/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**துலாம்:** செய்தொழில் அதிக லாபத்தை ஏற்படுத்தும். புதிய தொழில், வியாபாரத்தில் நல்ல லாபம் ஈட்டும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிச் செல்வார்கள். வழக்கு, வியாபாரம் வெற்றி பெறும். ராகு/கேது வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** வேலையில் இடமாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல லாபம் கிட்டும். தடை விலகித் திருமணம் நடைபெறும். வேலைப்பளு அதிகரிக்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பொறுப்பான பதவிகள் வந்து சேரும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மகான்கள் தரிசனம் கிட்டும். உடல்நிலை சீராகும். கல்வி வளம் மேலோங்கும். வழக்கு வெற்றி வாகை சூடும். எதிர்ப்பு, தொல்லை விலகும். வெளிநாட்டு அழைப்பு கிட்டும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் அளிக்கும்.

**மகரம்:** எதிர்பாராத விபத்துகள் ஏற்படலாம். கைப்பொருள் மீது கவனம் செலுத்தவும். குடும்ப வாழ்வில் அனுசரணையுடன் நடந்துகொள்வது நல்லது. யாருக்கும் ஜாமீன் போடுவது, பணம் கொடுப்பது மனஸ்தாபம் ஏற்படுத்தும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனைக் கொடுக்கும்.

**கும்பம்:** தொழிலில் இருந்து வந்த தேக்க நிலை மாறி சுறுசுறுப்பாக இயங்கலாம். கணவன் - மனைவி விட்டுக் கொடுத்து நடந்துகொள்வது நற்பலனை அளிக்கும். கல்வி வளம் மேலோங்கும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். ராகு/கேது/சனி/குரு வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**மீனம்:** வெளிநாடு செல்லும் யோகம் உண்டு. மகான்கள் தரிசனம் கிட்டும். வீடு/மனை வாங்க ஏற்ற காலம். எதிர்ப்பு, தொல்லை விலகும். தொழிலில் முன்னேற்றம் காண்பீர்கள். சுபச் செலவு ரெடி. தடை விலகித் திருமணம் கைகூடும். ⊙

## பரத்வாஜ் பதில்கள்

**பூர்வீகச் சொத்து கைக்கு வந்து சேருமா?**

-எம்.வெங்கடாசலபதி,
சென்னை - 117

தற்போது சுக்ரதசை ஆரம்பமாகி உள்ளது. இது உங்கள் கஷ்டங்களை விலக்கி நல்லது செய்யும். கவலைப்படத் தேவை இல்லை. பூர்வீகச் சொத்து வந்து சேரும்.

**என் மகளுக்கு வேலையும், மகனுக்குத் திருமணமும் எப்போது நிகழும்?**

- ஜி.வீரராகவன், திருச்சி

உங்கள் மகளுக்கு 2008-ல் ஆசிரியர் வேலை கிடைக்கும்.

உங்கள் மகனுக்கு 36 வயதில் திருமணம் முடியும். படித்த பண்புள்ள பெண் அமைவாள்.

## காதல் பொன்மொழிக் கதை 4

காதலிக்காமலே இருப்பதைக் காட்டிலும் காதலித்துத் தோற்பது மேல்.
- டென்னிஸன்

குப்பிக்கு அழுகை அழுகையாக வந்தது. மூங்கில் தட்டில் கிடந்த பூச்சரம் பூத்து மணக்க ஆரம்பித்துவிட்டது. இன்னும் அரை மணி போனால் மொத்தமாக மலர்ந்து, மெள்ள மஞ்சள் ஓட ஆரம்பித்துவிடும். கொஞ்சம் மலர்ந்தாலும் பஸ்ஸில் வரும் சீமாட்டிகள் பேரம் பேசி விலை குறைக்கச் சொல்லுவார்கள். கிடைக்கிற காசில் அஞ்சும் பத்தும் குறைந்து போனால், குழம்புக் காயை நிறுத்துவதா, தக்காளியை வாங்காமல் போவதா? இனி கடன் சொன்னால் ஏற்றுக் கொள்ள ஊரில் கடை பாக்கி இல்லை.

மல்லித் தோட்டம் போட்டுப் பிழைக்கும் மனிதர்கள் ஜன்மாந்திரத்துக் கடனோடு பூமிக்கு வருவதாகச் சொல்லுவாள் அம்மா. ''பூக்காட்டியும் கஷ்டம்; பூத்துக் குலுங்கினாலும் கஷ்டம்தான்டீ குப்பி!''

கிராமத்துப் பள்ளியில் படித்தவரையில் குப்பிக்கு இந்தப் புலம்பலின் கணக்கு வழக்குப் புரியவில்லை. ஆனால் இப்போது, சாயம்போன தாவணியுடன் டவுன் ஹைஸ்கூலுக்கு சைக்கிள் மிதித்துப் போகையில் வேதனையோடு புரிகிறது விஷயம். அம்சாபுரத்திலிருந்து அருக்கம்பட்டிவரையிலான அத்தனை தோட்டங்களிலும் பத்து நாட்களாக அரும்பு பறிக்காமலே பூத்து பழுப்பாகி உதிர்ந்து கொண்டிருந்தது. பறிக்கக் கூலி கிலோவுக்குப் பத்து ரூபாய். பத்து ஆள் பரபரவென்று பறித்தால்தான் நேரத்தோடு கூடைகளை நிரப்ப முடியும். டவுன் பஸ்ஸில் ஏற்றிப்

சீதா ரவி

போய் திண்டுக்கல்லில் சேர்க்கிற செலவு வேறு! அங்கே பதினெட்டுப் பட்டி பூவும் குவிஞ்சு குவிஞ்சு கிடக்க, தரகு பேசும் வியாபாரிகள் கேட்கிற விலைக்கு, பறிக்கக் கொடுத்த கூலிகூட தேராது...' அம்சாபுரம் மாதிரி சின்னச் சின்ன தோட்டத்துக்காரர்கள் அரும்புகளைப் பறிக்காமலே விட வேண்டியதுதான்.

அந்த மாதிரி நாட்களில் குப்பியும் அவள் சினேகிதிகளும் பள்ளிவிட்டதும் மல்லித் தோட்டத்துக்கு வந்து அரும்புகளைச் சேகரிப்பார்கள். அவசர அவசரமாய்ப் பறித்தெடுத்து அங்கேயே புளிய மரத்துப் பொந்தில் மறைத்து வைத்த நூல் கண்டை எடுத்துப் பூக்களைக் கட்டுவார்கள். மரக் கிளை இடுக்கில் மூங்கில் தட்டுகள் செருகியிருக்கும். கட்டிய சரங்களை கேரி பேக்கில் போட்டு, ஹேண்டில் பாரில் மாட்டிக் கொண்டு, மூங்கில் தட்டுகளை சைக்கிள் பின் ஸ்டேண்டில் இடுக்கிக் கொண்டு, சாயங்காலம் நாலு மணிக்குள் கொடை ரோடு பஸ் ஸ்டாண்டுக்கு வந்து விட வேண்டும். மலைக்கு வரும் - போகும் புதுமண ஜோடிகள் பஸ்ஸில் நிறைய இருந்தால், பூ வேகமாக விற்றுத் தீரும்...

இன்று எந்த பஸ்ஸிலும் ஜோடிகளைக் காணோம். குப்பி அரசமரத்தடி பிள்ளையாரை வேண்டினாள்... 'சாமி இந்தப் பூவை இன்னைக்கு விக்கச் செய்யு... பத்து சுத்து சுத்தி வந்து ஒனக்குத் தோப்புக்கரணம் போடறேன்.'

உடம்புக்கு வேதனையும், மனசுக்குப் பாரமும் ஆனபோதும் குப்பிக்கு இப்படி அல்லாடிப் பூ விற்கப் பிடித்திருந்தது. பஸ்களில் வரும் ஜோடிகளைப் பார்க்கையில் அவள் மனமொட்டுக்குள் பதுங்கிக் கிடக்கும் எல்லப்பனின் ஞாபக மணம் அசைந்துகொடுத்து ஆசையைத் தூண்டியது. உதட்டோரம் புறப்படும் சிரிப்பை உள்ளுக்குள் திருப்பிக் கொள்வாள். அவளும் எல்லப்பனும் என்றைக்காவது ஒருநாள் பஸ் ஏறி ஜோடியாக மலைக்குப் போவதாகவும், திரும்பி வருகையில் இதே இடத்தில் அவன் மல்லிச்சரம் வாங்கி அவளுக்குச் சூடி விடுவதாகவும் ஆசைக் கனவு வந்து வந்து அவள் நெஞ்சை நிறைக்கும். அடுத்த நிமிஷமே ''மல்லி மல்லிப்பூ...'' என்று வியாபாரத்தில்

# ஸ்ரேயாவைப் போல் ஒரு பெண்!

குறியாக வேலை பார்க்க வேண்டிவரும்.

எல்லப்பனின் ஞாபகம் அதிகம் வருவது அரும்பு பறிக்கிறபோதுதான். கண் பார்ப்பதை கை பாட்டுக்குப் பறித்துக் கொண்டேயிருக்கும். மனசு மட்டும் இலையிடுக்கு அரும்புகளைப் போல் ரகசிய ஆசைகளில் புதையும். கூடப் பறிக்கும் எந்தப் பெண்ணுக்கும் தெரியாத கனவுகள் அவள் சின்ன இதயத்

“ஸ்ரேயாவைப் போல் ஒரு பெண்ணைத்தான் கட்டட்டுமே... என் மனசுக்கு அவன் ராஜா!”

தில் மோதும். - அதோடு நினைவுகளும் கலந்து கோலாட்டம் போடும். எல்லப்பனைப் பற்றிய நினைவுகள்தான்!... கூலியாட்கள் அரும்பு பறிக்கையில் குப்பியும் கூடவே வளைய வருவாள். ''தோ பாரு இங்கொண்ணு... அதோ பாரு அங்கொண்ணு...'' என்று சுட்டிக் காட்டிக் மறைந்திருக்கும் மல்லி மொட்டுக்களையும் கூடைக்கு அனுப்புவது உற்சாகமாய் இருக்கும் அவளுக்கு.

ஒரு நாள் தூரத்து வரப்புமேட்டில் ஓடி வந்த புள்ளி உருவம் எல்லப்பனுடையது என்று தெரிந்ததும் சந்தோஷமாக அவனை எதிர்கொள்ள ஓடினாள்.

''குப்பி! குப்பி...!'' என்று அலர ஆரம்பித்தான் கூப்பிடுதூரம் வந்ததுமே.

''தோ வாரேன்!'' என்று பதில் குரல் கொடுத்தபடி ஓடினாள்.

''விளையாட வராம என்ன பண்ணிக்கிட்டிருக்கே?''

''அரும்பு பறிக்கறதப் பாத்துக்கிட்டிருக்கேன்.''

''அதான் ஆள்காரங்க பறிக்கறாங்கல்ல நீ எதுக்கு அங்கயே நிக்கணும்...? வா வா வெள்ளாடலாம்'' என்று கைகளைப் பிடித்து இழுத்தான்...

''இரு இரு... எல்லப்பா, அவங்க மறஞ்சு கிடக்கிற அரும்பையெல்லாம் கவனமா, ஒட்ட பறிக்கமாட்டாங்க... நான் பாத்துக்கணும்.''

சட்டென்று அவள் கைகளை விட்டான் எல்லப்பன். தன் இரண்டு கன்னங்களிலும் உள்ளங்கைகளை அழுத்திக்கொண்டு பயந்துபோய் சொன்னான் ''வேண்டாம் குப்பி! ஒட்டப் பறிச்சுடாதீங்க... வேண்டாம் வேண்டாம்...'

''ஏன்...?'' குப்பி வியந்துபோய்க் கேட்டாள்.

''பட்டுப்பூச்சிக்குத் தேன்குடிக்க கொஞ்சமாவது மிச்சம் வைக்கணும் குப்பி...''

வாயடைத்துப் போனாள் குப்பி!

வரப்போரத்துக் காட்டுப்பூவில் மஞ்சள் நிறப் பட்டுப்பூச்சி உட்கார்ந்து தேன் உறிஞ்சிக்கொண்டிருந்தது.

''அங்க பாரு...'' என்று அதைக் காட்டினான் எல்லப்பன். ''அந்தப் பட்டுப்பூச்சி தோட்டத்து அரும்பையெல்லாம் இருட்டு கவியறதுக்கு முந்தியே வந்து பார்த்து வைச்சிருக்கும். நாளைக்கு வந்தா இங்கே தேன் உறிஞ்சலாம்னு ஆசைஆசையா நினைச்சுக்கிட்டிருக்கும். நீங்க அரும்பையெல்லாம் ஒட்டப் பறிச்சுட்டா பூக்களைத் தேடி வர்ற பட்டுப்பூச்சி பதறுமே குப்பி...!''

எல்லப்பன் தொண்டை அடைக்கச் சொன்னபோது குப்பிக்கும் அழுகை வந்தது.

இப்போதும் அவனை நினைக்கையில் அழுகை வருகிறது. சில சமயம் சிரிப்பும் வருகிறது. என்னவென்று புரியாத அவஸ்தையாக அவன் தனக்குள்ளேயிருந்தபடி ஒளிந்துபிடித்து விளையாடுவது போலிருந்தது நீண்ட நாட்களுக்கு. விளையாட்டின் இறுதியில் எப்போதும் அவனே ஜெயித்து விடுவான் - ''குப்பி கருப்பி! குப்பி கருப்பி! குப்பி கருப்பி''- இந்தக் கெக்கலி போதும் அவளை வீழ்த்துவதற்கு.

அவள் மூணாவதும் அவன் எட்டாவதும் படித்த காலத்தில் கண்ணாமூச்சி ஆட்டத்தில் அவள் தொடர்ந்து ஜெயிப்பது பொறுக்காமல் பழித்துக்காட்ட ஆரம்பித்த பழக்கம். எப்போதெல்லாம் அவள் மீது கோபமோ அப்போதெல்லாம் அதையே சொல்லிக் காட்டுவான். இத்தனைக்கும் எல்லப்பன் ஒன்றும் பௌர்ணமி சந்திரனின் நிறமில்லை. குப்பியைக் காட்டிலும் கொஞ்சம் கறுப்பு கம்மி - அவ்வளவுதான்.

ஆரம்பத்தில் குப்பி விசித்து விசித்து அழுவாள்... அப்புறம்தான் புரிந்தது. அவன் தன் தோல்வியை மறைக்க அவள் நிறத்தைப் பயன்படுத்துகிறான் என்று. பாவமாக இருக்கும்போதெல்லாம் அவனிடம் வேண்டுமென்றே தோற்க ஆரம்பித்தாள்.

அவள் தோற்றாலும் அவனுக்குச் சகிக்க வில்லை. ''போதும் ஆட்டம்!'' என்று பட்டுப்பூச்சியைப் பார்க்க அவளையும் இழுத்துக்கொண்டு ஓடுவான்!

இப்போதும் எல்லப்பன் தன் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு ஓட மாட்டானா என்றிருந்தது குப்பிக்கு. இரைக்க இரைக்க அவனோடு ஓடி கடைசியில் அவன் மடியில் தலை வைத்துப் படுக்க ஆசை வந்தது. மல்லி அரும்புகளைப் பறிக்கும்போதும் தொடுக் கும் போதும் ஒரே ஒரு இணுக்கைக் கிள்ளித் தன் எலிவால் ஜடையில் சூடும்போதும் அந்த ஆசை அதிக அதிகமாகப் பொங்கியது. கண்ணாடி யில் முகத்தைப் பார்த்துக் கொண்டாலோ தண்ணி தெளித்தது போல் அடங்கி யது. திண்டுக்கல்லுக்கு வேலைக்குப் போய் விட்ட எல்லப்பன் தன் னையா நினைத்துக் கொண்டிருக்கப் போகிறான்? 'கருப்பி கருப்பி' என்று அழைத்த வன்தானே... ''கட்டினால் ஸ்ரேயாவைப் போல் ஒருத்தியைக் கட்ட வேண்டும்'' என்று அவன் மனசில் இன்றைக்கு ஆசை இருக்கலாம்...

''சீ! சும்மா கிட!'' என்று கண்ணாடி பிம்பத்தைப் பார்த்துச் சுள்ளென விழுந் தாள் குப்பி. அது அவளைப் பார்த்துச் சிரித்தது! இரண்டு நாட்கள்தான். விளிம்பில் நகர்த்தி வைத்திருந்த எல்லப் பன் திரும்பவும் மனசுக்குள் வந்து குந்திக் கொண்டான்! அழுந்த உட்கார்ந்து கொண்டு ராஜாங்கம் செய்ய ஆரம்பித்தான்.

குப்பி போராடிப் போராடித் தோற்றுப் போய் ஒருநாள் எல்லப்பனை அள்ளி அணைத்துக் கொண்டாள் - மனசுக்குள் தான்! 'இந்தக் கதகதப்புக்குத்தான் காதல் என்று பெயர் சொல்லுவார்களாக்கும்..?' தனிராக ஒரு நம்பிக்கை அவள் இதயத்தில் தகதகத்தது - 'எல்லப்பன் நல்லவன்; பட்டுப்பூச்சிகளுக்கு அரும்புகளை மிச்சம் வைக்க நினைக்கும் பஞ்சு மனசுக்காரன். அவன் வராமலேதான் போகட்டுமே; ஸ்ரேயாவைப் போல் ஒரு பெண்ணைத் தான் கட்டட்டுமே. என் மனசுக்கு அவன் ராஜா.'

அந்த நினைப்பு கொடுத்த நம்பிக்கை தான் குப்பியை வாழ வைக்கிறது. பூ விற்ற பணம் மிளகாய்க்குக்கூட காணாத நாட் களில், கட்டிய சரங்களை பிள்ளையார்

## சொல்லாததையும் செய்வேன்!

காஜா மைதீனை ஞாபகமிருக்கிறதா? தற்போது படங்கள் தயாரிக்காவிட்டாலும் 'ரோஜா கம்பைன்ஸ்' பெயரை மக்கள் மத்தியில் நிலை நிறுத்தியவர். இவரின் முயற்சியால் இப் போது இவரது அண்ணன் மகன் கஜினி நடிகராகிவிட்டார்.

''நானா விரும்பி ஏற்ற துறை இது. 'பழனியப்பா கல்லூரி' தான் நான் நடிக்கிற முதல் படம். அன்பாலயா பிரபாகரன் தயாரிப்பு. பல ஹீரோக்களை அறிமுகம் செஞ்ச ராசியான கை அவரோடது. அவர் மூலமா நான் நடிக்க வர்றதுல ரொம்பப் பெருமை. எந்த கேரக்டர் எனக்குச் சரி வருமோ அதை மட்டும்தான் பண்ணப் போறேன். யாரையும் காப்பி யடிக்கப் போறதில்ல. எனக் குன்னு தனி ஸ்டைலை ஃபாலோ பண்ணப் போறேன்'' என்று பேசிக் கொண்டே போனவரிடம் ''இப்படித்தான் பலரும் சொல்றாங்க...'' என்றால், ''நான் சொல்லாததையும் செய்றவன்'' என்கிறார் கூலாக!

– மேகலா



> "பிள்ளையாரப்பா! இந்த வண்டியிலாவது ஜோடிகளை அனுப்பி வை!"

கழுத்தில் போட்டு விட்டு அவனுக்காகவே வேண்டிக்கொள்ள முடிகிறது. அழுகை வந்தாலும் கண்ணீரை அவனுக்கே தருகிறாள். சிரிப்பு வந்தால் சேமித்து வைத்து அவன் மீது சொறிகிறாள்...

தூரத்தில், பஸ் வருவது தெரிகிறது... 'பிள்ளையாரப்பா! இந்த வண்டியிலாவது ஜோடிகளை அனுப்பி வை...'

ஏர் ஹார்ன் ஓசையும் புழுதியும் காற்றை நிறைக்க வந்து நின்ற வண்டியை நோக்கி ஓடினாள் குப்பி...

ஜன்னல் ஜன்னலாகப் பார்த்துக் கொண்டே வந்தாள். டிரைவர் சீட்டுக்கு முந்தைய ஜன்னலிலிருந்து கை நீண்டு ஐம்பது ரூபாய் நோட்டை நீட்டியது. "இருக்கற பூவை அப்படியே கொடுத்துரும்மா..." பூவுடன் சில்லறையை எடுத்துத் தந்தபோது டிரைவர் இருக்கையிலிருந்து குரல்.

"ஏய் குப்பி! குப்பிதானே...?"

எல்லப்பன் அல்லவா...! அரும்பு மீசையும் சுருட்டை முடியும், ஆச்சர்யம் நிறைந்த விழிகளுமாய்த் தெரிந்த முகத்தைப் பார்த்தாள்.

எல்லப்பனே... தான்! அவன் பெயரைச் சொல்லிக் கூப்பிட வாயெழாமல் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

மேல்கேரியரில் போட்ட பெட்டிகளைக் கூலியாட்கள் இறக்கிக் கொண்டிருந்தார்கள். சிவப்பு கவுனில் ஒரு சின்ன பாப்பா ஜன்னல் வழியே குப்பியைப் பார்த்துக் கையசைத்தது. இந்தப் பிரக்ஞை எதுவும் இன்றி குப்பி எல்லப்பனின் முகத்தை விழி எடுக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அவனும் ஏதேதோ பேசினான். அப்பா அம்மா பற்றி, திண்டுக்கல்லிலிருந்து மதுரை போய்விட்டது பற்றி...

'கண்டக்டர் விசில் கொடுத்து விட்டார் - எல்லப்பன் பறந்துவிடப் போகிறான்...' அவள் ஓர் அடி எடுத்து, அருகே சென்றாள்.

"சிவாஜி படம் பார்த்தியா குப்பி?" என்றான். இல்லை என்று தலையசைத்தாள்.

"அதுல வர ஸ்ரேயாவைவிட நீ ரொம்ப ரொம்ப அழகா இருக்கே, தெரியுமா..." என்றான் மிக மென்மையாக.

குப்பிக்கு ஒரு கூடை மல்லிகைப் பூவைத் தலையில் கவிழ்த்த மாதிரி இருந்தது.



## நம்பிக்கை நாயகன்!

அதிரடி ஹீரோ ரித்தீஷ், அடுத்த படத்துக்குத் தயாராகிவிட்டார். 'நாயகன்' படத்தில் இவரோடு இணைந்து நடிக்கும் இன்னொரு ஹீரோ ரமணா.

"ரெண்டு பேருக்கும் இந்தப் படத்துல சமமான பாத்திரம். நான் என்கவுன்ட்டர் போலீஸ் அதிகாரியா நடிக்கிறேன். 24 மணி நேரத்துல ஒரு டாக்டர் குடும்பத்துல ஏற்படுற பிரச்னையை மையப்படுத்திதான் கதை நகருது. ஆக்ஷன் படமா உருவாயிட்டு வர்ற நாயகனோட இன்டர்வெல் பிளாக் மட்டும் ஐந்து நாட்கள் ஆயிரக்கணக்கான பயணிகளுக்கு மத்தியில் இரயில்வே ஸ்டேஷனில் படமாக்கப்பட்டது. இரண்டு பாடல் காட்சிகளுக்காக மட்டும் அறுபது இலட்ச ரூபாய் செலவு பண்ணியிருக்கோம். நல்ல டீம் அமைஞ்சதால ரசிகர்களுக்கு நிச்சயம் நல்ல படத்தைத் தருவேன்னு நம்பிக்கை இருக்கு" என்கிறார் ரித்தீஷ்.

ஒரு விஷயம் தெரியுமா? படிக்கக் கஷ்டப்படும் பலருக்குச் சத்தமில்லாமல் உதவி புரிந்து வரும் ரித்தீஷ், பல மாணவர்களின் நம்பிக்கை நாயகனாகவும் திகழ்ந்து வருகிறார்.

-அபி

# மைனரா.. மேஜரா...?

**1**

"நீ கேள்விபட்டியா?"

"இல்ல... நான் கோவில்பட்டி!"

- பி.ஜி.பி.இசக்கி



**2**

"உங்களுக்கு மைனர் ஆபரேஷன் செய்யட்டுமா? இல்ல மேஜர் ஆபரேஷன் செய்யட்டுமா?"

"என்ன டாக்டர் சொல்றீங்க?"

"மேஜர் ஆபரேஷன்னா நான் செய்வேன். மைனர் ஆபரேஷன்னா பத்தாவது படிக்கற என் மகன் பண்ணுவான்."

- பொள்ளாச்சி கே.சித்ரா



**3**

"தனி ஒரு மனிதனுக்கு உணவு இல்லையெனில்... மிச்சத்தை முடி பாலு!"

"அவன் பொண்டாட்டி பார்க்கற மெகா சீரியலை பாதியிலேயே ஆஃப் பண்ணிடனும் சார்."

- வெ.சீதாராமன்



**4**

"கறுப்புப் பணம் வச்சிருக்கறதுக்கு பிராயச்சித்தம் பண்ணிட்டேன்."

"என்ன பண்ணீங்க?"

"சிவாஜி படத்தைப் பார்க்காம இருந்துட்டேன்!"

- பி.ஜி.பி. இசக்கி



**5**

"ஒருத்தரை துன்புறுத்துறது பாவம்தானே சார்?"

"ஆமாம்... ஏன் கேட்கறே?"

"அப்ப ஏன் சார் பாடம் நடத்துறீங்க?"

-ஜீ.வி.சுபாஷ்



அம்புப் படுக்கையில் படுத்திருந்த பீஷ்மர் "உத்தராயணம் வரும் வரையில் நான் இந்த அம்புப் படுக்கையில் கிடப்பேன்" என்றார். சூரியன் வடக்கு முகமாகச் செல்லும் தை முதல் ஆனி வரையிலான காலத்தைதான் உத்தராயணம் என்பார்கள் (பாரதப் போர் மார்கழி மாதத்தில் துவங்கியது). தேவர்களைப் பொறுத்தவரை உத்தராயணம் என்பது பகல். தட்சிணாயனம் என்பது இரவு. எனவே உத்தராயணத்தில் இறப்பதே நல்லது என்பது ஆன்றோர் நம்பிக்கை.

படுத்த நிலையிலேயே தொடர்ந்து வரும் போரின் போக்கைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்குத் தமது முடிவும் தெரிந்திருந்தது. போரின் முடிவும் தெரிந்திருந்தது. அவர் நாக்கு வறட்சியில் தவிக்கத் தொடங்கியது. இதைக் கண்ணுற்ற அர்ஜுனன், அவர் முகத்துக்கு வலப்பக்கமாக இருந்த நிலப்பகுதியில் ஒரு அம்பைச் செலுத்தினான். அது மண்ணுக்குள் ஆழமாகப் பதிய, உள்ளிருந்து நீர் ஓர் ஊற்றாக வெளிவந்து, பீஷ்மரின் நாக்கை நனைத்தது. அவர் தாகம் தணிந்தது.

"அப்படி நீரூற்றுக் கிளம்பிய இடம்தான் இந்த

# குருக்ஷேத்ரம் - 4



கிணறு. இதை பாண கங்கா என்றும் பீஷ்ம குண்டம் என்றும் சொல்வார்கள்" என்றார் ராமநாதன்.

"இங்கே சரஸ்வதி நதிதானே பாய்ந்தது, கங்கை எப்படி?" என்று குறுக்குக் கேள்வி கேட்டான் ஜருகண்டி.

"பீஷ்மர் யார்? கங்கையின் மகன். மரணப் படுக்கையில் இருக்கும் தன் மகனின் தாகத்தைத் தணிக்க மாதா பாய்வது இயல்புதானே" என்றார் ராமநாதன் பொறுமையாக. பிறகு "நீ இன்னொரு கேள்வியும் கேட்பாய் என்று நினைத்தேன்" என்ற ராமநாதன், அங்கிருந்து சற்றுத் தள்ளியிருந்த பிரம்மாண்டமான ஆஞ்சநேயரின் திருவுருவத்தை சுட்டிக் காட்டினார்.

"பீஷ்மர் இறந்த இடத்தில் ஆஞ்சநேயர் எதற்காக என்று யோசித்தாயா? அம்புப் படுக்கையில் இருந்த நாட்களில் விஷ்ணு சகஸ்ரநாமம் கூறக் கேட்டார் பீஷ்மர். சிரஞ்சீவியான அனுமனைத் தமது கடைசி தருணங்களில் கண்ணாரக் காண வேண்டும் என்ற ஆவல் அவருக்கு ஏற்பட்டது. அனுமனை வேண்டினார்.

'தன்னைப் போன்றே இன்னொரு கர்மவீரர், பிரம்மச்சாரி.' அனுமன் அருள் பாலித்தார். பீஷ்மருக்கு விஸ்வரூப தரிசனம் அளித்தார். உண்

மையிலேயே கண்கொள்ளாக் காட்சி! பீஷ்மரின் ஆன்மா அமைதி பெற்றது. அதன் நினைவாகத்தான் இந்த பிரம்மாண்ட ஆஞ்சநேயர் திருவுருவம் இங்கு எழுப்பப்பட்டிருக்கிறது'' என்றார் ராமநாதன்.

ஜருகண்டி மும்முறை பீஷ்மரின் திருவுருவத்தை வலம் வந்தான். நாங்களும் முகத்தில் தோன்றிய ஆனந்த பரவசத்திலேயே தெரிந்தது.

அடுத்தது எங்கே?

''மகாதேவ மந்திருக்கு'' என்றார் ராமநாதன்.

''சிவன் கோயிலா?'' என்ற ஜருகண்டி, ''ஒரு வழியாக மகாபாரதத்திலிருந்து விலகுகிறோமா?'' என்றான்.

''அபத்தமாகப் பேசாதே. கண்ணன் இடம்பெற்றதால் மகாபாரதம் சிவனிடமிருந்து விலகியதாக அர்த்தம். இந்த பேதமெல்லாம் அற்ப மனம் படைத்த

# கடவுளிடம் கண்ணீர் விட்ட நதிகள்!

தான். பின் மௌனமாக காரை நோக்கி நகர்ந்தோம்.

''பாவம், கிருஷ்ணரின் தந்திரத்தினால்தானே பீஷ்மர் இறந்தார்!'' என்றான் ஜருகண்டி திடீரென்று.

''இதற்கான பதிலை நான் நிச்சயம் சொல்ல வேண்டும். அதுவும் குருக்ஷேத்திரத்திலேயே. ஆனால் அந்த இடம் இது அல்ல'' என்றார்.

அவர் நினைத்துக் கொண்டிருந்த இடம் அவருக்குள் ஆழ்ந்த பக்தி அலைகளை உருவாக்கிக் கொண்டிருந்தது. அவரது

வர்களுக்குத்தான். கடவுளின் அம்சங்களில் பேதங்கள் கிடையாது. ராமேஸ்வரத்தில் ராமர் சிவபூஜை செய்யவில்லையா?'' என்று அடக்கினார் ராமநாதன்.

''ராமேஸ்வரம் ஒரு விதிவிலக்கு'' என்றான் ஜருகண்டி முனகலாக.

''அப்படிப் பார்த்தால் குருக்ஷேத்ரமும் தான். இங்குள்ள மகாதேவ மந்திருக்கும் பாண்டவர்களோடு கண்ணன் வந்திருக்கிறார். சிவனைத் தொழுதிருக்கிறார்.''

மேலும் சிறிது தூரம் நடந்ததும்

## அருண் சரண்யா



சன்னிஹித் சரோவர் தெரிந்தது. அற்புதமான 'எல்' வடிவக் குளம். மயிலை கபாலீஸ்வரர் திருக்குளத்தைப் போல் சுமார் மூன்று மடங்கு இருக்கும் என்று தோன்றியது. அதன் நடுவில்தான் மகாதேவ மந்திர்.

''அமாவாசை அன்று இங்கே வந்து பார்க்க வேண்டும். கூட்டம் எக்கச்சக்கம். இங்கு அமாவாசை

தர்ப்பணம் செய்தால் நமது முன்னோர்கள் இறைபதம் அடைவார்கள், மறுபிறவி எடுக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கை காலம் காலமாக நிலவுகிறது. சூரிய கிரகணம் அன்று இங்கு ஸ்நானம் செய்தால் அஸ்வமேத யாகம் செய்த பலன் கிடைக்கும்'' என்றார். பிறகு மகாபாரத காலத்துக்கு மீண்டும் எங்களை அழைத்துச் சென்றார்.

''அஞ்ஞாத வாசத்தின்போது தங்கள் அஸ்திரங்களை மரத்தில் ஒளித்து வைத்திருந்த பாண்டவர்கள், போர் தவிர்க்க முடியாது என்ற நிலை வந்ததும் அந்த ஆயுதங்களை சன்னிஹித் சரோவரில்தான் கழுவினார்கள். சன்னிஹித் சரோவரின் மகிமை அவர்களுக்குத் தெரிந்திருந்தது. அந்த மகிமை வந்த கதை இதுதான்.



✱ சன்னிஹித் சரோவர்

**சூரிய கிரகணம் அன்று இங்கு ஸ்நானம் செய்தால் அஸ்வமேத யாகம் செய்த பலன் கிடைக்கும்.**

ஒருமுறை எல்லா நதிகளும் கடவுளிடம் சென்று கண்ணீர் விட்டன. 'எங்கள் நீரில் மூழ்கி மனிதர்கள் பாவத்தைக் கரைக்கிறார்கள். பாவங்களைச் சுமக்கும் பாரத்திலிருந்து எங்களை விடுதலை செய்யுங்கள்' என்றன.

அந்த வேண்டுகோளிலிருந்த நியாயத்தை உணர்ந்துகொண்ட இறைவன், 'அமாவாசையன்று சன்னிஹித் சரோவருக்கு வந்து சேருங்கள். உங்கள் பாவங்கள் நீங்கும்' என்றார். அமாவாசையன்று இங்கு கூடும் கூட்டத்துக்கு இதுவும் ஒரு முக்கிய காரணம்.''

சன்னிஹித் சரோவரில் ஸ்நானம் செய்துவிட்டு மகாதேவ மந்திருக்குள் நுழைந்தோம்.

உள்ளே மகாதேவர் லிங்க வடிவில் காட்சி தந்தார். வடநாட்டு வழக்கப்படி அவரைத் தொட்டு வழிபட்டுக் கொண்டிருந்தார்கள். நாங்களும் மெய்யுருக அவரை வழிபட்டோம்.

லிங்கத்தைச் சுற்றி வருவதற்குக் கணிசமான பகுதி உள்ளது. ராமநாதன் அந்தப் பகுதியின் சிறப்பை வெளியிட்டார். ''இப்போது அகவுஸ்டிக்ஸ் என்று ஒலிச் சிறப்பு கொண்ட பொறியியல் துறை பற்றிப் பேசுகிறோமே, அந்தக் காலத்திலேயே இது எந்த அளவு நம் பாரத தேசத்தில் சிறந்திருந்தது என்பதற்கு இந்த மகாதேவர் கோயிலே ஒரு உதாரணம்'' என்றவர், லிங்கத்தைச் சுற்றி இருந்த நான்கு மூலைகளில், ஒரு மூலையில் ஜருகண்டியையும் அதற்கு நேரெதிரான மூலையில் என்னையும் நிற்க வைத்தார். இருவரையும் சுவரைப் பார்த்து நிற்கச் சொன்னார். என் காதருகே வந்து ''ஜருகண்டியிடம் ஏதாவது கேள்வியைக் கேள். அதிக சத்தம் வேண்டாம். சாதாரணமான குரலில் சுவரைப் பார்த்துக் கேள்'' என்றார்.

''ஜருகண்டி, உன்னை இந்தச் சுவராக உருவகப்படுத்திப் பேசலாமா?'' என்று கேட்டேன் இயல்பான குரலில். நேரிடையாக அந்தக் குரல் அவன் காதுகளை எட்டியிருக்க முடியாது. சுவர்களைப் பார்த்துக்கொண்டு நாங்கள் நின்றதால் உதட்டசைவைக் கொண்டும் கண்டுபிடித்திருக்க முடியாது.

சில கணங்கள்தான். ''தாராளமாகப் பேசலாம். எங்கம்மாகூட என்னை 'நீயும் குட்டிச்சுவரும் ஒண்ணு'ன்னு சொன்னதுண்டு'' என்று ஜருகண்டியின் குரல் கேட்டது சுவரின் வழியாக! ராமநாதன் என்னைப் பெருமையாகப் பார்த்தார்.

(பயணம் தொடரும்)

# நீங்கள் கேட்டவை

● ஜெ.துரைராஜ், சென்னை - 116

? ஓவலில் அனில் கும்ப்ளேயின் அபார சாதனை பற்றி? அவருடைய இளமைக் கால கனவு நிறைவேறிவிட்டதே!

! ஒரு செஞ்சுரிகூட இல்லாமலே 600 எட்டும் சாதனையை இந்தியா இழந்துவிட்ட போதிலும் நூற்றுக்கணக்கான விக்கெட்டுகளை வீழ்த்திய கும்ப்ளே, வாழ்நாளின் முதல் நூறு ரன்களைக் குவித்தார் என்பதில் மகிழ்ச்சியே.

● ச.நாகரத்தினம், திருப்பூர்

## கரண்ட் இல்லாத வீடுகளுக்கு கலர் டி.வி.யா?

! சமயப் பார்வையில் முரண்பட்டாலும் சமூகப் பார்வையில் ஒன்றுபடுவதால்தான்.

● ஜி.குப்புசுவாமி, சங்கராபுரம்

? சாஃப்ட்வேர் துறையில் அதிகச் சம்பளம் கிடைக்கிறது என்பதற்காக நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் டாக்டர் படிப்பைக் கைவிட்டிருக்கிறார்களே...?

! அப்படிக் கைவிடக்கூடிய மனோநிலை படைத்தவர்கள் டாக்டர்களாகாததே



* சமூகம்...



* — பார்வை

? சம்பாதிக்கும் பெண்கள் அதிகரிக்க அதிகரிக்க, அவசர உணவு விடுதிகளும் ஆண்கள் வீட்டில் சமைப்பதும் இன்னும் மிகுதியாகி, குடும்பம் என்ற கட்டமைப்பு குலைந்தால் என்ன செய்வது?

! வீட்டுப் பணிகளை ஆண்கள் பகிர்ந்துகொள்வதால் குடும்பக் கட்டமைப்புக் குலையாது. சமூக மாற்றம் நிகழ்ந்து வரும் இக்கால கட்டத்தில், பாலின பேதம் கடந்த பொறுப்பு பகிர்தல் மட்டுமே குடும்ப அமைப்பைக் காப்பாற்றும்.

● வெ.நா.சிவகுமார், சென்னை - 33

? தவத்திரு பொன்னம்பல அடிகளாரும் கி.வீரமணியும் அடிக்கடி ஒரே மேடையைப் பகிர்ந்து கொள்கிறார்களே?



* முதல் தரம்!

# தராசு




நல்லது!

● என்.எஸ். மணிமாறன், திருவண்ணாமலை ❒

? கரண்ட் இல்லாத வீடுகளுக்கு கலர் டீ.வி. வழங்கியிருப்பது பயன் தருமா?

! ம்... வீட்டுக்காரர் விற்றுக் காசாக்கலாம்; கட்சிக்காரர் சாதனைப் பட்டியலில் புள்ளிவிவரம் சேர்க்கலாம்; ஆட்சிக்காரர் நாளிதழில் அதையே விளம்பரமாகப் போட்டு மக்கள் பணத்தை அள்ளலாம். யார் சொன்னார்கள் பயன் தராதென்று?

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? குழந்தை பெற்றுக்கொள்வதை இரண்டு - மூன்று ஆண்டுகள் தள்ளிப் போடும் தம்பதிகளுக்கு ரூ.5000, ரூ.7500 தேனிலவு நிதி தருகிறதே சதாரா மாவட்ட (மஹாராஷ்டிரா) நிர்வாகம்?

! குறுகிய காலத்துக்குக் குழந்தை பிறப்பதைக் கட்டுப்படுத்தவல்ல இத்திட்டம், நீண்டகால நோக்கில் உகந்தது அல்ல. ஜனத்தொகை இதனால் குறையாது.

● ஆர்.செந்தில், திருக்கோவிலூர்

? வாழ்க்கை என்பது என்னவென்று எனக்குப் புரிய மாட்டேனென்கிறது; பிறரும் புரியவைக்க மாட்டேனென்கிறார்கள்? என்ன செய்யலாம்?

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
**என்.எஸ்.மணிமாறன், திருவண்ணாமலை**

! அதாங்க வாழ்க்கையோட அழகும் சுவாரஸ்யமும். ஆகையால் ஒன்றும் செய்ய வேண்டாம் - அதன் புரியாமையையும் சேர்த்து, சந்தோஷமாக அனுபவியுங்கள்!

● என்.சண்முகம், சேலம் - 1

? 'உங்களால் என்ன செய்ய முடியும்?' என்று சிறை அதிகாரிகள் கேட்டதற்கு, "நான் ஒரு நடிகன்; என்னால் நடிக்க முடியும்" என்று சஞ்சய் தத் பதிலளித்துள்ளாரே - பாவமாக இல்லையா?

! ஆமாம்; நடிப்பாற்றலை வளர்த்துக்கொண்டபோதே நடைமுறை வாழ்க்கைக்கான பணிகளையும் பயிலாமல் இருந்துவிட்டது பரிதாபம்தான்.

● எஸ்.சாந்தி, காட்பாடி

? 'பொறுக்கி' என்று பெயர் வைத்த படத்துக்கு, அரசின் கேளிக்கை வரிச் சலுகை நியாயமா?

! அரசாணையோ சட்டமோ, பிறப்பிக்கும் முன்னர் நன்கு யோசித்துச் செயல்பட வேண்டும். 'தமிழ்ப் பெயருக்கு வரிச் சலுகை' என்று ஆணை பிறப்பித்த பிறகு, 'பொறுக்கி'க்கு வரிச்சலுகைதான்; 'ரோக்' - 'ராஸ்கல்' என்றால் கிடையாதுதான்.

● கே.கஸ்தூரி, வேலூர்

? தமிழகத்தில் இன்னும் பகுத்தறிவுப் பக்குவம் ஏற்படாமல் மக்கள் காசி - ராமேஸ்வரம் என்று போவதும், நெற்றியில் விபூதி - குங்குமம் பூசுவதும் தமிழக முதல்வருக்கு வேதனையாக இருக்கிறதாமே?

! 'பகுத்தறிவு என்பது சமய நிராகரிப்பு, கடவுள் மறுப்பு' என்ற குறுகிய நோக்கை விட்டு வெளியே வருவது முதல்வருக்கு நல்லது. கோயிலுக்குப் போவதும் திருநீறு - குங்குமம் பூசுவதும் மூடநம்பிக்கை வட்டத்துக்குள் வராது. பகுத்தறிவு வாதமே, இன்றைய விண்வெளி யுகத்தில் எல்லாம் வல்ல இறைவனை ஏற்றுக்கொள்ளும் நிலைக்கு வந்திருக்கிறது.

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி

* ரூ.50 பரிசு பெறுபவர் :
**பா.முத்துமாணிக்கம், அரிவலம்**

? சபரிமலையில் பெண்களை அனுமதிக்கப்போவதாக தேவஸ்வம் போர்டு கூறியுள்ளதே?

! ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் மட்டும் அனுமதிக்கப் போவதாக முடிவெடுத்துள்ளது. ஆரோக்கியமான ஆரம்பம்தான்.

● ஆர்.அஜிதா, கம்பம்

? தமிழகத்தில் 33 லட்சம் போலி ரேஷன் கார்டுகள் புழக்கத்தில் உள்ளதாகவும் அவற்றை 45 நாட்களுக்குள் அகற்ற

வேண்டும் என்றும் கலெக்டர்கள் மாநாட்டில் முடிவு செய்யப்பட்டிருப்பது பற்றி...?

! ரேஷன் இருக்கும்வரை போலி ரேஷன் கார்டுகள் இருக்கும். ரேஷன் கடைகளில் ஊழலும் நிலவும். ரேஷனை நீக்குமளவில் உற்பத்தி பெருக கவனம் செலுத்துவதே அரசின் பிரதான நோக்கமாக இருக்க வேண்டும்.

● ஜெகா, கும்பகோணம்

? ''நான் காஞ்சி சங்கராச்சார்யாரின் பக்தன்; ஆகவே இந்த மனுவை விசாரிக்கமாட்டேன்'' என்று நீதிபதி பாலசுப்ரமணியன் சொல்லியிருக்கிறாரே?

! நீதிபதி இத்தகைய உணர்வுகளைக் கடந்தவராக இருக்க வேண்டும். ஆனால், அப்படி இல்லாத பட்சத்தில், இவ்வாறு விலகிக்கொள்வதே நல்லது.

● பா.முத்துமாணிக்கம், அரிவலம் ★

? சிவாஜி படத்தில் இடம்பெற்ற 'அங்கவை' 'சங்கவை' பாத்திரங்கள் கேலிக்குள்ளானதை யாரும் பெரிய அளவில் கண்டனம் செய்யவில்லையே?

! 'காலச்சுவடு' கொடுத்த சாட்டை அடியின் சுவடு ஆயுசுக்கும் இருக்கும்!

★ சுவடு மாறாமல்

● ராமலக்ஷ்மணன், கோவை - 15

? பாலியல் வியாபார வழக்கில் கைதான நடிகை பத்மா, முதலில் 'தப்பு செய்துவிட்டேன்' என்று அழுதுவிட்டு, மறுநாளே பாலியல் பலாத்கார புகார் கொடுக்கிறாரே?

! மேலோட்டமாகப் பார்க்க முரண்பாடு தெரிந்தாலும் மேலோட்டமாக ஒரு முடிவுக்கு நாம் வர முடியாது. நீதி விசாரணையில் உண்மை தெரிய வந்தால் சரி.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

? குத்துப்பாட்டுக்கு டிக்ஷனரியில் அர்த்தம் தேடினேன். கிடைக்கவில்லை. உங்களுக்குத் தெரிந்தால் சொல்லுங்களேன்...?

! சினிமாவும் டி.வி.யும் (சீரியல்கள் உள்பட) நேரடி விளக்கமளித்துக் கொண்டிருக்க, அகராதியில் அர்த்தம் தேடுவானேன்.

●



★ மேலோட்ட முரண்பாடு



★ தெரிந்த வித்தை!

# எங்களுக்கும்



"நடனத்தை வாழ்க்கையா வரிச்சுக் கிட்டா வேற எதுவுமே முக்கியமா நமக்குத் தோணாது. பிள்ளைகுட்டிங்க, பொண்டாட்டிகூட அதுக்குப் பின்னாடிதான்" என்கிற கொம்பு முருகன் நடன இயக்குநர் சிவசங்கரிடம் பணிபுரிந்தவர். 1965-இல் இத்துறைக்கு வந்தவருக்கு 2004க்குப் பிறகுதான் நடன இயக்குநராக ப்ரமோஷன் கிடைத்திருக்கிறது.

"என் சொந்த ஊரு அம்பாசமுத்திரம். எங்கப்பா சிலம்பு வாத்தியார். ஒரு காலத்துல சினிமா அவரோட கனவா இருந்தது. ஆனா, அப்பாவால வர முடியல. நான் பள்ளிப் படிப்பை முடிச்சதும், சினிமாவுல சேர்ந்து முன்னுக்கு வர-அவரே என்னை சென்னைக்கு அனுப்பி வச்சார். இங்க வந்து ரொம்ப கஷ்டப் பட்டேன். என்ன பண்றது, ஏது பண்றதுன்னு தெரியாம பல நாள் அழுதிருக்கேன். ஒரு வழியா நண்பர்கள் மூலமா மேடைக் கச்சேரிகள்ல நடனமாடுற சான்ஸ் கிடைச்சுது. கப்புன்னு புடிச்சுக்கிட்டேன். நடனம்தான் நம்ம வாழ்க்கைன்னு மனசுல முடிவான உடனே முறையா கத்துக்க ஆரம்பிச்சேன். வேலை செஞ்சு சேர்த்து வச்ச காசை எடுத்துப்போய் யூனியன்ல மெம்பராகி கார்டு வாங்கினேன். ஆனாலும் உடனே என்னை யாரும் டான்ஸ் ஆடக் கூப்பிடல. நம்ம கலரு கொஞ்சம் நஞ்சமில்ல... நல்லாவே கருப்பு.. அதனால வாய்ப்புக் கிடைக்க ரொம்ப சிரமப்பட்டேன். அப்புறம் ஒரு வழியா குரூப்ல ஆட ஆரம்பிச்சு இப்போ தனியா பண்ற அளவுக்கு வந்தாச்சு" என்று தம் அனுபவங்களை நம்மிடம் பகிர்ந்துகொண்ட முருகன், நடனக் கலைஞர்களின் தினப்படி வாழ்க்கை குறித்தும் பேசினார்.

# மனசு உண்டு!



"யூனியன்ல மெம்பராகாம நீங்க சினிமால டான்ஸ் ஆட முடியாது. டைரக்டர் நடன இயக்குநர் கிட்ட பாட்டைக் கொடுத்து எப்படி வேணும்ங்கறதைச் சொன்னதும் டான்ஸர்களோட வேலை ஆரம்ப மாகும். மொதல்ல குரூப் டான்ஸா, இல்ல ஹீரோ - ஹீரோயின் மட்டும் தனியா ஆடுறாங்களான்னு பார்ப்பாங்க. தனியான்னா அவங்களுக்கு மட்டும் டான்ஸ் சொல்லிக்கொடுத்து ஷூட் பண்ணிடலாம். குரூப்னா கம்பெனி யோட பட்ஜெட் என்னன்னு பார்ப்பாங்க. அதுக்கேத்த மாதிரி எத்தனை குரூப் டான்ஸர்ஸ் வேணும்னு முடிவு பண்ணி, எல்லோருக்கும் தகவல் போகும். நேர மிருந்தா ஷூட்டிங்குக்கு முன்னாடி ஒரு நாள் ரிகர்சல் நடக்கும். இல்லைன்னா நேரா ஸ்பாட்டுக்கே போய் வேலையை ஆரம்பிக்க வேண்டியதுதான். ஒரு ஸாங் எடுக்க குறைஞ்சபட்சம் ரெண்டு நாள்- அதிகபட்சம் பதினைஞ்சு நாளாகும். யூனி யன் ரூல்ஸ்படி ஒரு கால்ஷீட் சம்பளம் ஆயிரத்து அறுநூறு ரூபாய். ஒரு கால்ஷீட் டுங்கறது காலை ஆறு மணிலேர்ந்து சாயந்தரம் ஆறு வரைக்கும். வேற மொழி கள்ல வேலை செய்யும்போது ஒவ்வொரு கால்ஷீட்டுக்கும் இருநூறு ரூபாய் எக்ஸ்ட்ரா கிடைக்கும்.



அழகுதான் இந்த ஃபீல்டுக்கு மூலதனம்ங்கறதால அதிகபட்சம் முப்பது, முப்பத்தஞ்சு வயசு வரைக்கும்தான் வேலை நல்லா இருக்கும்!

பொதுவாவே ஷூட்டிங் ஸ்பாட்ல எங்களால எந்தப் பிரச்னையும் ஏற்படாது; குறிப்பா, லேட்டாகாது. சமயத்துல ஹீரோ- ஹீரோயின் சொதப்பினாத்தான் டிலே ஆகும். ஒரு பாட்டுக்கு என்ன மாதிரி காஸ்ட்யூம் வேணும்னு முடிவு பண்றாங்







# நடனம்ங்கறது ஓர் அற்புதமான கலை அதைச் சீர்படுத்தலைன்னாலும் நாம சீரழிச்சுடக் கூடாது!



களோ அதைப் போட்டுத்தான் ஆகணும். 'துணி கம்மியாயிருக்கு. அது சரியில்ல... இது சரியில்லை'ன்னு அங்க சொல்ல முடியாது. முன்ன எப்படியோ, இப்பல் லாம் யூனியன் ஸ்ட்ராங்கா இருக்கறதால எங்களை எல்லோரும் நல்லா மதிக்கறாங்க. தப்புத் தண்டாவுக்கு இப்ப வழியில்லாமப் போச்சு. சம்பளத்தை கம்பெனி யூனியன்ல கட்டிடும். நாங்க அங்க போய்க் கலெக்ட் பண்ணிக்குவோம்.

மாஸ்டருங்களுக்கு நம்ம வொர்க் பிடிச்சுப் போயிட்டா தங்களோட எல்லா படங்கள்லயும் தொடர்ந்து வாய்ப்புக் கொடுப்பாங்க. யூனியன் ரூல்ஸ்படி ஒரு பாட்டுக்கு நடனம் அமைக்கக் குறைஞ்சது பதினைஞ்சா யிரத்துலேர்ந்து சம்பளம் வாங்கலாம். மாஸ்டருங்களும் தேவையில்லாம திட்ட மாட்டாங்க. ரொம்பக் கனிவாத்தான் நடந் துக்குவாங்க. எங்களுக்குத் தேவையான அடிப்படை வசதி எல்லாத்தையும் செஞ்சு கொடுப்பாங்க.

இந்தத் தொழிலைப் பொறுத்தவரைக் கும் நாம் முன்னேறணும்னு மனசு வச்சாத் தான் முன்னேற முடியும். கிணத்துல போட்ட கல்லு மாதிரி இருந்தா கடைசி வரை அப்படியே இருக்க வேண்டியது தான். நல்ல திறமை இருந்து, சரியான வாய்ப்பு அமைஞ்சா ரொம் பக் குறுகிய காலத்துலயே டான்ஸ் டைரக்டரா ஆயிட லாம். ஒருவேளை சினிமால பிரகாசிக்க முடியாவிட்டாலும் நடனப் பள்ளி மாதிரி அமைச்சு சொல்லிக் கொடுத்து பிழைக்கக் கலாம்.



அழகுதான் இந்த ஃபீல் டுக்கு மூலதனம்ங்கறதால அதிகபட்சம் முப்பது, முப்பத்தஞ்சு வயசு வரைக்கும் தான் வேலை நல்லா இருக்கும். அப்புறம் யூனியனே பெரியவங்க லிஸ்ட்ல நம்மைச் சேர்த்துடும். நடிக்கும்போதே பணத்தை கண்டபடி செலவழிக்காம சேர்த்து வச்சாத்தான் டான்ஸருங்களோட பின்பாதி வாழ்க்கை நல்லாருக்கும். இல்லன்னா கஷ்டம்தான். அழகை எக்ஸ்போஸ் பண்ற வேலைன்றதால குரூப் டான்ஸர் கள்ல குறிப்பா பெண்களுக்குத் இரு மணம்ங்கறது கேள்விக்குறியாயிடும். அதனால பெரும்பாலும் அவங்களைப் புரிஞ்சுக்கிட்ட சினிமா ஆட்களைத்தான் கல்யாணம் பண்ற சூழ்நிலைக்குத் தள் ளப்படுவாங்க. சமயங்கள்ல புரிஞ்சுக் கிட்ட துணை வெளில கிடைக்கறதும் உண்டு.

சில பேர் நினைக்கற மாதிரி டான்ஸர் கள்னா தப்பான ஆட்கள் கிடையாது. அவங்களுக்கும் மனசு உண்டு. அதுல உணர்வுகளும் உண்டு. எங்கயோ ஓர் இடத்துல தவறு நடக்கும்தான், இல்லைங் கள... ஆனா அதையே முன்னுதாரணமா வச்சு ஒட்டுமொத்தமா எல்லோரையும் கீழ்ப்பார்வை பார்க்குற போக்கு மாறணும்.

நடனம்ங்கறது ஓர் அற்புதமான கலை. அதைச் சீர்படுத்தலைன்னாலும் நாம சீரழிச் சுடக் கூடாது. இந்த உணர்வு ஒவ்வொரு டான்ஸருக்குள்ளயும் இருக்கும். மக்கள் கிட்ட இந்த எண்ணம் ஏற்படணும்ங்கறது தான் எங்களோட விருப்பம்'' என்கிறார் முருகன்.

சந்திப்பு : **மு.மாறன்**

# அணு ஒப்பந்தம் எதிரொலி!



* பி.எஸ்.ராகவன்

"நமது இறையாண்மை, சுதந்திரப் போக்குக்கு முற்றிலும் பாதகமான அம்சங்கள் இடம் பெற்றிருப்பதோடு நமது விஞ்ஞானிகளை முடக்கிப்போடு வதற்கும் அமெரிக்கா உடனான அணுசக்தி ஒப்பந்தம் வழி செய்யும்'' என்று குற்றம் சாட்டு கிறார் பி.எஸ்.ராகவன். மேற்கு வங்க மாநிலத் தலைமைச் செய லாளராகவும் இந்தியாவின் பாதுகாப்பு குறித்த அமைப்புகளிலும், சர்வதேச அமைப்புகளிலும் பணிபுரிந்திருக்கும் ஓய்வுபெற்ற ஐ.ஏ.எஸ். அதி காரியான ராகவனுடனான சந்திப்பிலிருந்து...

''நம்மிடமுள்ள மொத்த அணுசக்தித் திறனில் நாம் இப்போது பயன்படுத்துவது மூன்று சதவிகிதம்தான். இந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில் அமெரிக்காவிடமிருந்து எரி பொருள், தொழில்நுட்பம், இயந்திரங்கள் மற்றும் உதிரி பாகங்கள் பெற்றுக்கொண்டு அடையப்போகும் அணுசக்திப் பயன்பாடு என்பது அடுத்த இருபத்தைந்து ஆண்டுகளில், இந்த மூன்று சதவிகிதத்திலிருந்து 15 - 18 சதவிகி தத்தில்தான் போய் நிற்கும். நாமே வரும் உற்பத்திக்குத் தடையில்லாமல் யுரேனியம் கிடைக்க வேண்டும். அதற்கான உத்தரவாதம் இதில் இல்லை. நமது வெளியுறவுக் கொள்கை மற்றும் உள்நாட்டுப் பிரச் னைகள் காரணமாக யுரேனியம் தருவது நிறுத்தப்பட்டால், அந்த அடிப்படையில் உருவாக்கப்பட்ட எல்லா கட்டுமானங்களும் வீணாகப் போய் விடுமே! மற்ற நாடுகளில் அல்லது உலகச் சந்தை யில் வாங்கிக் கொள்ளலாமே என்ற கேள்வி எழும். இந்த



# மன்மோகன் மண்டியிடுவது ஏன்?

காலகட்டத்தில் இதற்கு மேலேயேகூட யார் தயவுமில்லாமல் அணு சக்தியைப் பயன் படுத்திக்கொள்ள முடியும். காரணம், அணு எரிபொருளுக்குத் தேவையான தோரியம் நம்மிடம் மண்டிக் கிடக்கிறது. அமெரிக்காவின் வலையில் சிக்கிக் கொண்டால் நம்மிடம் இருக் கும் தோரியத்தை உபயோகப்படுத்திக் கொள்ள முடியாத நிலை ஏற்படும்.

இந்த ஒப்பந்தத்தில், அமெரிக்கா நமக்குப் பல அம்சங்களில் முழு அளவில் உதவும் என்ப தற்கு உத்தரவாதம் ஏதுமில்லை. ஒப்பந்தம் நாற் பது வருடங்கள் அமலில் இருக்கும். அணுசக்தி

**ஒரு லட்சம் கோடி வருமானம் வரும் என்பதால்தான் அமெரிக்கா ஆர்வம் காட்டுகிறது!**

ஒப்பந்தத்தில் அப்படியொரு ஷரத்து சேர்க்கப்பட வேண்டுமென்றால் அமெரிக்கப் பாராளுமன்றத்தில் சட்டத்திருத்தம் கொண்டுவர வேண்டுமாம். இந்தியாவின் கைகளைக் கட்டிப் போடும் விஷயம் இது!

இந்தியா அணுகுண்டு சோதனை செய்தாலோ, அமெரிக்க வெளியுறவுக் கொள்கைக்கு விரோதமாக நடந்து கொண்டாலோ ஒப்பந்தம் ரத்து செய்



யப்படும் என்று அந்தச் சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பாதகமான அம்சத்தை எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? ஈரான் அணுகுண்டு தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தினால் அமெரிக்காவுடன் சேர்ந்து இந்தியாவும் அந்த நாட்டைக் கண்டிக்க வேண்டும்; தட்டிக் கேட்க வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தியாவின் வெளியுறவுக் கொள்கை சுதந்திரமாகச் செயல்பட இந்த ஒப்பந்தம் தடையாக இருக்கும். அந்தச் சூழலில் தொடர்ந்து அமெரிக்காவிடமிருந்து யுரேனியம் எப்படிக் கிடைக்கும்?

கழிவு யுரேனியத்தை மீண்டும் செறிவூட்டும் (reprocessing) தொழில்நுட்பம் ஏற்கெனவே நம் கைவசம் இருக்கிறது. இதை உலக அணுசக்தி கண்காணிப்பின் கீழ் கொண்டு வந்து அமெரிக்க நிபந்தனைகளுக்கு ஏற்பத்தான் கையாள வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படிச் செய்யாவிடில் அமெரிக்க உதவி நிறுத்தப்படுமாம். இதுதவிர, முக்கியமான தொழில்நுட்பங்கள் இந்தியாவுக்குக் கிடைக்காத வகையில் ஒப்பந்தம் இருக்கிறது. அணுசக்தி விஷயத்தில் எல்லா விதத்திலும் முழுமையான ஒத்துழைப்புக்கான ஒப்பந்தம் என்று சொல்லப்பட்டிருந்தாலும், அணுசக்தியின் இரட்டைப் பயன்பாடு, செறிவூட்டும் தொழில்நுட்பம் போன்ற நுணுக்கமான விஷயங்கள் தவிர்க்கப்பட்டிருக்கின்றன'' என்கிறார் ராகவன்.

**அமெரிக்கா இந்த ஒப்பந்தத்தில் ஏன் மிகவும் ஆர்வமாக இருக்கிறது?**

''இந்த ஒப்பந்தம் நிறைவேற்றப்பட்டால் எரிபொருள், இயந்திரங்கள், தொழில்நுட்பம் போன்ற வர்த்தகத்தில் அமெரிக்க நிறுவனங்களுக்குச் சுமார் ஒரு லட்சம் கோடி வருமானம் கிடைக்கும்.''

**மன்மோகன் சிங் ஏன் ஒப்பந்தம் போடுவதில் குறியாக இருக்கிறார்?**

''அணுசக்தியின் மூலம் நாம் இப்போது 3000 மெகாவாட் மின்சாரம்தான் தயாரிக்கிறோம். ஒப்பந்தத்துக்குப் பின் அமெரிக்க உதவியுடன் 40000 மெகாவாட் உற்பத்தி செய்யலாமே என்ற 'நல்லெண்ணம்' காரணமாக இருக்கக்கூடும். நம்மிடமுள்ள யுரேனியம் மற்றும் தோரியத்தைப் பயன்படுத்தி நாமே 1,20,000 மெகாவாட் அணு மின்சாரம் தயாரிக்க முடியும். அமெரிக்காவிடம் மண்டியிடாமலே இதைச் சாதிப்பதுதானே நமது நோக்கமாக இருக்க வேண்டும்.''

**- ப்ரியன்**

படம்: **ராஜன்**

“தமிழ் சமுதாயத்தின் மகோன்னத வாழ்வையும், அது போற்றி வளர்த்த மானத்தையும் வீரத்தையும், அவர்கள் கடைபிடித்து வந்த பண்பாட்டுக் கூறுகளையும் எதிர்காலச் சந்ததியர் தெரிந்து கொள்ள வேண்டுமெனில் அமரர் கல்கியின் எழுத்துக்களை வாசிப்பது அவசியம்'' என்றார் வைகோ. இலக்கியத்தின் இனிமை குழைத்து இப்படி அவர் பேசியது அரசியல் மேடையிலல்ல... அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கம் சென்னையில் ஏற்பாடு செய்திருந்த அமரர் கல்கியின் புகழ் விழாவில். தொடர்ந்து சிவகாமியின் சபதம் குறித்து இரண்டரை மணி நேரம் பேசினார்.

# அமைச்சரைவிட ஆசிரியரே மேல்!

''வரலாறுகளில் தென்படும் செய்திகளைத் தொகுத்து இனிமையாக எதிர்காலச் சந்ததியினர் பயன் படும் வகையில் தருவதே சரித்திர நாவலாசிரியரின் பணி. அந்த வகையில் அமரர் கல்கி சரித்திர நாவல்களின் மைல் கல்'' என்றார் முத்தாய்ப்பாக.

விழாவுக்குத் தலைமையேற்றுப் பேசிய எழுத்தாளர் சங்கத்தின் தலைவர் விக்கிரமன், ''தமிழ் எழுத்தாளர் சங்கத்துக்கு வித்திட்டதே அமரர் கல்கிதான். எனவே அவருக்கு விழா எடுப்பது சாலப் பொருந்தும்'' என்றார்.

டாக்டர் பூவண்ணன், ''தம்முடைய நூல்களில் நூறு வருடங்கள் தாண்டியும் நிற்கக்கூடிய தகுதி அலையோசைக்குத்தான் உண்டு என்றார் கல்கி. அது உண்மைதான். ஆனால், நூறு வருடங்கள் தாண்டியும் நிற்கக்கூடிய தகுதி சிவகாமியின் சபதத்துக்கு உண்டு'' என்றார்.

“தமிழக முதல்வராக ராஜாஜி பதவியேற்றபோது கல்கி, ஆனந்த விகடன் ஆசிரியராக இருந்தார். அப்போது நிருபர்கள் அவரிடம், 'உங்கள் நண்பர் முதலமைச்சராகிவிட்டார். இனி நீங்கள் அமைச்சராகி விடுவீர்கள்தானே?' என்று கேட்டபோது, 'ஆசிரியர் பணியைவிட அமைச்சர் பதவி எனக்கொன்றும் பெரிதில்லை' என்று கூறிய பெருந்தகையாளர் கல்கி'' என்றார் பேராசிரியர் தி.ராஜகோபாலன்.

வரலாற்று எழுத்தாளர் கௌதம நீலாம்பரனுக்கு கல்கி விருதும் பண முடிப்பும் விழாவில் வழங்கப்பட்டது. பாரதிசுராஜ் வரவேற்றுப் பேச, இதயகீதம் இராமானுஜம் நன்றி கூறினார்.



* விருதும் பணமுடிப்பும்...

''இனி ஒவ்வொரு வருடமும் கல்கி புகழ் விழாக்கள் வெவ்வேறு ஊர்களில் நடத்தப்படும்'' என்று மேடையில் அறிவிக்கப்பட்டதும் கல்கி ஆர்வலர்கள் மத்தியில் மகிழ்ச்சிப் பூக்களைக் காண முடிந்தது.

– கமலி

படம்: இலா.சுந்தர்



தமிழ்நாட்டில் சுமார் பதினெட்டு லட்சம் உடல் ஊனமுற்றவர்கள் வசிக்கிறார்கள். இவர்களை மாற்றுத்திறன் படைத்தோர் என்று இப்போது அழகாகக் குறிப்பிடுகிறோம். இவர்களில் எழுபது சதவிகிதத்தினர் கிராமப்புறங்களில் இருக்கின்றனர். இவர்களின் நல்வாழ்வுக்காகவும், சமுதாயத்தில் அவர்களும் மற்ற பிரிவினர் போல் கௌரவமாக வாழ்வதற்கும் சம வாய்ப்பு, உரிமைகள் கிடைக்கவும் நான்கு சட்டங்களைப் போட்டிருக்கிறது அரசு.

● மாற்றுத்திறன் படைத்தோர் முதலில் செய்ய வேண்டியது, தங்கள் குறைபாடு குறித்த விவரங்களைச் சொல்லும் புகைப்படம் ஒட்டிய அடையாள அட்டை பெறுவதுதான். இதற்காக மாவட்ட மறுவாழ்வு அதிகாரியை (District Rehabilitation Officer) அணுக வேண்டும். அவர் தக்க மருத்துவமனைக்கு அனுப்பி பரிசோதனை செய்த பிறகே, அடையாள அட்டை வழங்கப்படும்.

● மாற்றுத்திறன் படைத்தோர் குழந்தைகளின் பள்ளிப் படிப்புக்கு அரசு மாதந்தோறும் உதவித் தொகை வழங்குகிறது. ஒன்றாவது படிக்கும் குழந்தைக்கு மாதம் இருபத்தைந்து ரூபாயில் ஆரம்பித்து, பட்டமேற்படிப்பு, பொறியியல், மருத்துவம் படிப்பவர்களுக்கு மாதம் நூற்றுதொண்ணூற்று ஐந்து ரூபாய்வரை உதவித் தொகைகள் வழங்கப்படுகின்றன.

● பார்வையற்றோருக்கான ப்ளஸ்டு வரை படிக்கும் அரசுப் பள்ளி சென்னை பூந்தமல்லியில் இருக்கிறது. இதுதவிர தமிழகம் முழுவதும் நிறைய தனியார் பள்ளிகள் உள்ளன.

● எழுபத்தைந்து சதவிகித பாதிப்பு உடையவர்கள், அஞ்சல்வழிக் கல்வியில் இருபத்தைந்து சதவிகித கல்விக் கட்டணம் செலுத்தினால் போதும்.

● அரசு வேலைவாய்ப்பில் இவர்களுக்கு மூன்று சதவிகித இடஒதுக்கீடு இருக்கிறது. இதில் பார்வையற்றவர்களுக்கு ஒரு சதவிகிதம் கை, கால் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஒரு சதவிகிதம், காது கேட்காத, வாய் பேச முடியாத

வர்களுக்கு ஒரு சதவிகிதம்.

- நாற்பத்தைந்து வயது வரை பணியில் சேரச் சலுகையும் அளிக்கப்படுகிறது.
- இவர்களுள் படித்தவர்கள், வேலைவாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து, ஐந்து வருடங்களுக்கு மேல் வாய்ப்புக் கிடைக்காமல் இருந்தால் மாதா மாதம் உதவித் தொகை வழங்கப்படுகிறது.
- சுய வேலைவாய்ப்புக்குத் தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகள் பதினைந்தாயிரம் ரூபாய் வரை கடன் தருகின்றன. இதில் மூன்றாயிரம் ரூபாய் வரை இலவச பாஸ் வழங்கப்படுகிறது. பார்வையற்றவர்களுக்கு நகரப் பேருந்துகளில் மட்டும் இலவசப் பயணம் அனுமதிக்கப்படுகிறது.
- சுய வேலைவாய்ப்புக் கடனுக்காக தேசிய ஊனமுற்றோர் நிதி நிறுவனம் என்கிற மத்திய அரசின் அமைப்பு செயல்படுகிறது. இந்த நிறுவனம் தமிழகத்தில் மாநில கூட்டுறவு வங்கி மூலம் கடனுதவி செய்கிறது.

– கௌசி

# ஊக்கம் தரும் உதவித் தொகைகள்!

மானியமாகும். இந்த வங்கிகள் தாங்கள் கொடுக்கும் மொத்த கடன் வசதியில் மூன்று சத விகிதத்தை மாற்றுத்திறன் படைத்தோருக்கு வழங்க வேண்டும்.

- இவர்களுக்குத் தொழிற்பயிற்சி கொடுக்க மத்திய அரசு சென்னையில் பயிற்சி நிலையத்தை நடத்தி வருகிறது. இங்கே டர்னர், ஃபிட்டர் போன்ற தொழில் நுட்பப் பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன.
- இரயில் பயணத்தில் எழுபத்தைந்து சதவிகிதச் சலுகை அளிக்கப்படுகிறது. த்ரீ டயர் ஏஸி பிரிவு வரை இந்தச் சலுகை உண்டு. உடன் ஓர் உதவியாளரையும் கூட்டிச் செல்லலாம். அவருக்கும் சலுகைக் கட்டணம்தான். ரயில்வே ரிசர்வேஷன் கவுன்ட்டரில் தனி விண்ணப்பம் வாங்கிப் பூர்த்திச் செய்து கொடுக்க வேண்டும்.
- அரசுப் பேருந்துகளில் வீட்டிலிருந்து பணியிடத்துக்குப் போய்வர



"மாற்றுத்திறன் படைத்தோருக்குத் தொழிற் பயிற்சி கொடுக்க மத்திய அரசு சென்னையில் பயிற்சி நிலையம் நடத்தி வருகிறது!"



# நரியின் சாயம்

**இங்கிலாந்தில் இந்திய கிரிக்கெட் அணியின் கொடி உயரப் பறந்து கொண்டிருக்கிறது. ஆனால், இந்தியாவில் தன்னை வேரோடு சாய்க்க வந்த தீய சக்தியாக ஐ.சி.எல். மீது பகைமை பாராட்டிக் கொண்டிருக்கிறது இந்திய கிரிக்கெட் வாரியமான பி.சி.சி.ஐ. எரியும் இப்பிரச்னையின் சாதக பாதகங்களை அலசலாமா?**

**பி.சி.சி.ஐ.க்கும் ஐ.சி.எல்.க்கும் அப்படியென்னதான் பூசல்?**

அசட்டுக் கற்பனைதான் காரணம். 1970களில் ஆஸ்திரேலிய கிரிக்கெட் அமைப்புக்கு இதே போன்றதொரு தலைவலி ஏற்பட்டது. சேனல் நைன் தொலைக்காட்சியை நடத்தி வந்த கெரிபேக்கர் என்கிற பெரியவர் ஆஸ்திரேலிய கிரிக்கெட் வாரியத்துடன் மோதிக்கொண்டு தனியாகப் போட்டிகள் நடத்த ஆரம்பித்தார்.

அந்த மூன்று வருட காலகட்டத்தில் கிரிக்கெட் உலகம் இரண்டாகப் பிளந்திருந்தது. கெரிபேக்கர் வழங்கிய சௌகரியங்கள் ஏழ்மையான கிரிக்கெட் வீரர்களுக்கு நிம்மதியைக் கொடுத்தன. அதிசயமாக இந்திய வீரர்கள் மட்டும் அப்போது இந்த மாயவலைக்குள் விழவில்லை. நாளடைவில் கெரிபேக்கரும் ஆஸ்திரேலிய வாரியமும் ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு வேறுபாடுகளை ஊதித் தள்ளினர். அன்றைக்கு கெரிபேக்கர் கொண்டு வந்த மாற்றங்கள்தான் ஒருநாள் போட்டிகளுக்கு கலர் சட்டை அணிவித்தது. மைதானங்களில் வானுயர மின் விளக்குகளை நிறுவியது.

இந்திய கிரிக்கெட் மேட்சுகளுக்கான தொலைக்காட்சி உரிமங்கள் கிடைக்காத கோபத்தில் ஆரம்பிக்கப்பட்டதுதான் இந்தியன் கிரிக்கெட் லீக் என்கிற அமைப்பு. ஜீ டி.வி.யைச் சேர்ந்த சுபாஷ் சந்திராதான் இதனுடைய சூத்ரதாரி. மொத்தம் ஆறு அணிகள். ஒவ்வொரு அணியிலும் நான்கு சர்வதேச வீரர்கள், இரண்டு இந்திய வீரர்கள் மற்றும் எட்டு இளம் வீரர்கள் இருப்பார்கள் என்று வாக்குறுதி கொடுத்திருக்கிறார் இவர். முதல் தவணையாக நூறு கோடிகளை வாரியிறைக்கிறார். சொந்தமாக ஸ்டேடியங்கள் கட்டவும் திட்டம் தீட்டுகிறார். இந்திய கிரிக்கெட் அகாடமியின் சேர்மனான கபில்தேவை தன் பக்கம் இழுத்துக்கொண்டார். 'இதென்ன திடீர் பிராண அவஸ்தை! நாளடைவில் தன் அங்கிகாரங்களையெல்லாம் ஐ.சி.எல். விழுங்கிவிடப் போகிறதா?' என்று குறுகிய வட்டத்துக்குள் பி.சி.சி.ஐ. யோசிப்பதால்தான் இத்தனை களேபரங்களும்.

**இதென்ன தாதாத்தனமாக இருக்கிறது? பி.சி.சி.ஐ. மட்டும்தான் கிரிக்கெட் போட்டி நடத்த வேண்டுமா?**

சட்டம் அப்படித்தான் சொல்கிறது. சர்வதேச கிரிக்கெட் அமைப்பான ஐ.சி.சி.

ஒரு நாட்டுக்கு ஒரு கிரிக்கெட் வாரியத்தை மட்டுமே அங்கீகரிக்கிறது. ஆகவே இந்தியாவுக்கு பி.சி.சி.ஐ.தான் சட்டாம்பிள்ளை. எம்.பி.பி.எஸ். படித்தாலும் மெடிக்கல் கவுன்சில் ஆஃப் இந்தியா என்கிற அமைப்பில் கட்டாயமாகப் பதிவு செய்தால் மட்டுமே நோயாளிகளுக்கு வைத்தியம் பார்க்க முடியும். அதுபோல இந்திய அணிக்காக கிரிக்கெட் ஆடவேண்டுமென்றால் பி.சி.சி.ஐ.யின் விதிமுறைகளுக்குக் கட்டுப்பட்டுத்தான் ஆக வேண்டும்.

**பி.சி.சி.ஐ. தன் வீரர்களுக்குத் தடையுத்தரவு போட்டுள்ளதை ஐ.சி.எல். எவ்வாறு சமாளிக்கப் போகிறது?**

இரு வருடங்களுக்கு முன்பு இந்திய அணிக்கு விளையாடிக் கொண்டிருந்த

**ச.ந. கண்ணன்**

ஜே.பி.யாதவ் என்கிற இளம் வீரர் ஐ.சி.எல்.போட்டியில் ஆட சம்மதம் தெரிவித்திருக்கிறார். மேலும் சில ரஞ்சி வீரர்கள் வரவிருப்பதாகவும் பட்சிகள் தகவல் தெரிவிக்கின்றன. லாரா, மெக்ராத், ஷேன் வார்னே, ஃப்ளமிங், இன்ஸமாம் உல் ஹக், அட்டப்பட்டு, அப்துல் ரசாக் போன்ற சர்வதேச வீரர்களும் ஐ.சி.எல். அழைப்புக்கு இசைந்துள்ளனர். பி.சி.சி.ஐ. என்கிற பூனை கண்ணை மூடிக்கொண்டால் உலகம் இருண்டுவிடுமா என்ன?

**ஐ.சி.எல். வெற்றி பெறுமா?**

எல்லோரையும் ஒருவித எதிர்பார்ப்பு கலந்த தவிப்பில் விட்டிருக்கிறார் சுபாஷ் சந்திரா. கபில்தேவ், கிரண் மோரே என

# வெளுக்குமா?


சி.ஐ. சேர்மன் சரத்பவார்

ஐ.சி.எல். அமைப்புக்குத் தாவிய முன்னாள் வீரர்களுக்கு பென்ஷன் தரமாட்டேன் என்று இப்போது அடம்பிடிக்கிறது பி.சி.சி.ஐ. 'ஆ! நீ இது மாதிரி செய்வது தகுமா? ஊர் பொறுக்குமா? உலகம் பொறுக்குமா? தர்மம் என்னவாகும்?' என்று பி.சி.சி.ஐ.க்கு எதிராக விளையாட்டு வீரர்களும் அரசியல்வாதிகளும் கொடி பிடிக்கத் தொடங்கி விட்டார்கள். நெருப்பு அவ்வளவு சீக்கிரம் அணையாது என்று தெரிகிறது.

இந்திய வீரர்கள் இங்கிலாந்தில் நடக்கும் கவுண்டி மேட்சுக்கு ஆடச் செல்வது போல ஐ.சி.எல். போட்டிகளிலும் ஆடுவதற்கு பி.சி.சி.ஐ. சம்மதம் கொடுப்பதே புத்திசாலித்தனம். மற்றபடி ஐ.சி.எல். வரவால் இந்திய கிரிக்கெட் உச்சிக்குச் செல்லும் என்றெல்லாம் ஆருடம் சொன்னால், அது அறியாமை. எது எப்படியோ, அடுத்த மாதம் தெரிந்துவிடும் எந்த நரியின் சாயம் வெளுக்கப்போகிறது என்று. ●

# தித்திக்கும் திங்கள்



**தி**த்திக்கும் திங்களில் இந்த வாரத்தின் முதல் வாசகர் மடிப்பாக்கம் கே.என்.பாலகிருஷ்ணன்.

"தித்திக்கும் திங்கள் பகுதி ஆரம்பித்த இதழிலிருந்தே ஒவ்வொரு வாரமும் திங்கள் கிழமை வெளியே செல்வதை ஒத்திவைத்து விட்டு உங்கள் தொலைபேசிக்காகக் காத்திருப் பேன். தாமதமாக வந்தாலும் சந்தோஷமாக இருக்கிறது. இந்த வாரம் அட்டைப் படம் அழகை அள்ளியது. தாயும் மகளுமான இந்த மாதிரி இயற்கையான படத்தைப் பார்த்து எவ்வளவு நாட்களாகிறது? ஆடுதுறை உளுந்து பற்றிய செய்தி அற்புதம். டான்ஸில் ஆப ரேஷன் பற்றிய கட்டுரை கண்டிப்பாக எல்லோ ரும் தெரிந்து வைத்துக்கொள்ள வேண்டிய பகுதி. இயற்கை வகுத்த விதிப்படி வாழ்ந்தால் இந்தத் தொந்தரவே இல்லை. அதனை மீறி வாழ்க்கையில் பயணிக்கும்போதுதான் பிரச்னைகளே வருகிறது."




✱ கண்ணன்

# ரேஷன்

✱ மீனா

**அ**டுத்ததாக தமது எண்ணங்களை வண்ணங்களாக்கியவர் குடவாசல் என்.டி.லதா.

"உங்ககிட்டேருந்து ஃபோன் வந்தது ரொம்ப சந்தோஷமா இருக்குங்க. சின்ன வயசுல இருந்தே கல்கியைப் படிக்கிறேன். காரணம் வீட்ல அப்பா, அம்மா, அண்ணா எல்லோருமே கல்கியைப் படிக்கறவங்க. அதனால எனக்கும் இயல்பாவே கல்கி மேலே ஈடுபாடு வந்துடுச்சு. குடும்பத்துடன் படிங்கன்னு ஒரு ஸ்லோகன் போடறீங்க இல்லியா? ரொம்பப் பொருத்தமான ஸ்லோகன். குடும்பத்துடன் படிக்க முடியற பத்திரிகைகள்ல கல்கி முக்கியமானது. அமரர் கல்கியோட கதைகளை நான் படிச்சதில்ல. இப்பத்தான் பார்த்திபன் கனவு தொடரைப் படிக்க ஆரம்பிச்சிருக்கேன். கவிதை களை இன்னும் அதிகம் எதிர்பார்க்கறேன். ஹைகூக்களையும் போடலாம். இந்த வாரம் பரிசுக்கதை 'புனிதப் பயணம்' படிச்சு மனசு குளிர்ந்து போச்சு. மனித நேயத்தை அற்புதமா சொன்ன கதை."



மூன்றாவதாக அலைபேசி வழியே குழலூதியவர் நெய்வேலி எஸ்.கண்ணன்.

''தலையங்கமும் தராசும்தான் நான் ரொம்ப விரும்பிப் படிக்கிற பகுதிகள். எனக்கு வயசு நாற்பது. இருபத்தஞ்சு வருஷமா கல்கியைப் படிக்கிறேன். கல்கியை புத்தகமா பார்க்கறதில்ல, எங்க குடும்பத்துல ஒரு உறுப்பினரா நினைக்கிறோம். ரேஷன் கார்டுல பெயரைச் சேர்க்கலை. அது மட்டும்தான் பாக்கி. சட்டப்படி அது சாத்தியமில்லை. இல்லைன்னா எங்க ரேஷன் கார்டுல கல்கி பெயர் இருந்திருக்கும். இந்த வார கவர் ஸ்டோரி 'எதிர்காலத்தின் அபூர்வ காட்சி?' சமுதாயத்துக்கு அக்கறை யோடு ஒலிச்சிருக்கிற எச்சரிக்கை மணி. இப்படியே போனா எதிர்காலத்துல பெண் களே இல்லாத ஒரு நிலை கண்டிப்பா ஏற்பட்டுடும். இது உடனடியா சரிசெய்யப் படணும். 'கிரேஸி பதில்கள்' 'வாரம் ஒரு பாசுரம்' பகுதிகளும் ரொம்ப நல்லா இருக்கு. கல்கியோட இந்த பாணி எப்பவும் தொடர ணும்.''



* பாலகிருஷ்ணன்

# கார்டில் கல்கி!



* லதா

இந்த வாரத்தின் இறுதி வாசகர் ஸ்ரீரங்கம், மீனா ஜெயராகவேந்திரன் :

நானும் என் கணவரும் விரும்பிப் படிக் கறது கல்கியைத்தான். பார்த்திபன் கனவு தொடரை ஏற்கெனவே படிச்சிருக் கோம். இப்ப மறுபடியும் படிக் கறப்ப முதல்முறை படிக்கும் போது இருந்த அதே ஆர்வம் இருக்கு. இந்த வார பெண் சிசுக் கொலை செய்தி ஒரு பத்திரிகையின் சமூக அக்கறையை எடுத்துக்காட்டும் விதமா இருந்தது. கல்கியில் இப்ப வர்ற பகுதிகள் எல்லாமே நல்லா இருக்கு. ஆனா சுருக்கமா கொடுக்கற மாதிரி தோணுது. பக்கங்களைக் கூட்டினா நிறைவா கொடுக்கலாம். பக்கங்களை அதிகப் படுத்துங்க.''

# கடவுளுக்கு வைக்கும் டார்கெட்!

"பிரார்த்தனையினால் சாதிக்க முடியாதது ஏதுமில்லை" என்பது முதுமொழி. மனமுருகிப் பிரார்த்தித்தால் நினைப்பதெல்லாம் நடக்கும் என்று இதற்கு அர்த்தம் கொள்கிறோம். நினைத்தபடியெல்லாம் நடக்காவிட்டாலும், நடப்பதையே ஏற்று மகிழும் பக்குவத்தை பிரார்த்தனை அளிக்கவல்லது. இந்த உண்மையைத்தான் பாரதியார் 'நம்புவதே வழி என்ற மறைதனை நாமின்று நம்பிவிட்டோம்... கும்பிட்ட நேரமும் சக்தி என்றால் உன்னைக் கும்பிடுவேன்...' என்று பாடினார்.

இந்த உண்மையை உணராமல், கடவுளுக்கு 'டார்கெட் ஸெட் பண்ணும்' தலைமுறையாக நாம் மாறி வருகிறோம். உண்டியல் காணிக்கை விகிதாசார கமிஷனாக மாறுகிறது! ஆன்மிகம் என்றாலே பரிகார பிரார்த்தனை, ஜோதிடத்தின் எக்ஸ்டென்ஷன் என்று ஆக்கி வருகிறோம்.



எந்தக் கோயிலுக்குப் போனாலும், அது எவ்வகையான பரிகார ஸ்தலம் என்று உணர்த்துவதில் அர்ச்சகர்கள் கவனமாக இருக்கிறார்கள். ஈ-காக்கை எட்டிப் பாராத புராதன ஆலயங்களுக்கு, கூட்டமும் வருமானமும் பெருகுவதற்கான சுலப மார்கம் 'பரிகார பூஜை' என்று அவர்களே சொல்கிறார்கள்! புராணங்கள் கர்ண பரம்பரைக் கதைகளையொட்டி கற்பனையைச் செலுத்தி, ஸ்தலத்துக்கு ஒரு பரிகாரச் சிறப்பும் கோயில் தோறும் ஒரு அனுக்கிரஹச் சிறப்பும் உருவாக்குவது சிரமமேயில்லை.

"இந்தப் போக்கை விமர்சிக்காதீர்கள்; ஏதோவொரு காரணத்தால் கோயில்களுக்கு நல்ல காலம் பிறந்திருக்கிறது..." என்பது ஒரு வாதம். "இப்படி ஒரு காரியம் நடக்க வேண்டுமென்பதற்காகவாவது கோயிலுக்கு வர ஆரம்பித்தால் அதுவே நல்ல தொடர் வழக்கமாக உருமாறும்" என்பது ஒரு சமாதானம். நல்லதாகவே இருக்கட்டும்.

ஆனால், கோயில், பூஜை, இன்னபிற ஆத்திக நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடுபடுவதாலேயே நமக்கு ஒரு தார்மிக உயர்வு கிட்டிவிட்டதாக இறுமாப்புக் கொள்கிறோமே, அதற்கு எங்கு போய் என்ன பரிகாரம் செய்வது!

கொஞ்சம் யோசித்துப் பார்த்தால், கோயில் என்ற அற்புத அமைப்பின் பின்னே அளவிட முடியாத உழைப்பும், கலையுணர்வும், அர்ப்பணிப்பும் இருப்பது புரியும். அதன் கோபுரத்தை அமைத்த உழைப்பாளிகள் எந்தப் பரிகார பலனையும் எதிர்பார்த்துச் செயல்படவில்லை. அதன் சிற்பங்களைச் செதுக்கிய கலைஞர்கள் 'என் மகளுக்குத் திருமணமானால் சிற்பம் செய்து வைக்கிறேன்' என்று நேர்த்திக் கடனாக அவற்றை அமைக்கவில்லை.

நம்மிடமும் பக்திக்குப் பஞ்சமில்லை. பெருக்கெடுக்கிற பக்தியை, பொது மேன்மைக்கு மடைமாற்ற கோயில்களே கற்றுத் தருகின்றன. அவற்றின் கம்பீரத்தைக் கவனித்தால் மனவடக்கம் முகிழ்க்கும்; இன்று கோயிலுக்கு வரவும் வழிபடவும் வரம் பெறவும் வகை செய்த முன்னோர்களிடம் நன்றியுணர்வு பெருகும்; நம்மைக் கடந்து சிந்திக்கவும் பிரார்த்திக்கவும் மனம் திறக்கும்... 'கோபுர தரிசனம் கோடி புண்ணியம்' என்று இதற்காகத்தான் சொன்னார்கள் போலும்! ●

